## மார்க்கத்தின் எச்சரிக்கை!

அன்புடையீர்! அஸ்ஸலாமு அலைக்கும். இந்த இணைய தளத்தில் உள்ளவைகளைப் பிரச்சாரம் செய்வதற்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் சில சகோதரர்கள் நமது ஆக்கங்களை அப்படியே பயன்படுத்தி தமது ஆக்கம் போல் காட்டுகின்றனர்.

இன்னாருடைய கட்டுரையில் இருந்து, அல்லது புத்தகத்தில் இருந்து இது எடுக்கப்பபட்டது என்று குறிப்பிடாமல் புகழடைவதற்காக இவ்வாறு செய்கின்றனர்.

சில இணைய தளங்களும் என்னுடைய ஆக்கங்களை அப்படியே வெளியிட்டு தம்முடைய ஆக்கம் போல் காட்டுகின்றன.மேலும் சில புத்தக வியாபாரிகளும் எனது நூல் உட்பட மற்றவர்களின் நூல்களைச் சிறிது மாற்றியமைத்து அனாமதேயங்களின் பெயர்களில் வெளியிட்டுச் சம்பாதிக்கின்றனர். உலகைப் பற்றியும் இவர்களுக்கு வெட்கம் இல்லை. மறுமையைப் பற்றியும் பயம் இல்லை.

இஸ்லாத்தில் இவ்வாறு செய்ய அனுமதி இல்லை. இவர்கள் நல்லது செய்யப் போய் மறுமையின் தண்டனைக்கு தம்மைத் தாமே உட்படுத்திக் கொள்கின்றனர்.

பிறரது ஆக்கங்களைப் பயன்படுத்துவோர் இது இன்னாருடைய ஆக்கம் என்று குறிப்பிடாமல் தன்னுடைய ஆக்கம் போல் காட்டுவது மார்க்க அடிப்படையில் குற்றமாகும்.

இவர்களுக்கு அல்லாஹ் விடுக்கும் எச்சரிக்கையை இங்கே சுட்டிக் காட்டுகிறோம்.

தாங்கள் செய்தவற்றுக்காக மகிழ்ச்சியடைந்து, தாம் செய்யாதவற்றுக்காகப் புகழப்பட வேண்டுமென விரும்புவோர் வேதனையிலிருந்து தப்பித்து விட்டார்கள் என்று நீர் நினைக்காதீர்! அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உள்ளது.

திருக்குர்ஆன் 3:188

முஹ்யித்தீன் மவ்லித் ஓர் ஆய்வு

அற்புதங்களா? அபத்தங்களா?

காயல்பட்டிணத்தைச் சோர்ந்த மஹ்மூத் என்பவரால் சில ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதே முஹ்யித்தீன் மவ்லிது.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களை அல்லாஹ்வின் தூதருக்கு நிகராகவும், அல்லாஹ்வின் தூதரை விடச் சிறந்தவராகவும் காட்டும் வகையில் இந்த மவ்லிது அமைந்திருக்கிறது.

அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் சிறந்த மார்க்க மேதை. உயிர் பிரியும் வரை ஏகத்துவத்தை நிலைநாட்டப் போராடிய பெரியவர், இஸ்லாத்தின் மேன்மைக்காக உழைத்த மார்க்க சீலர் என்று நாம் அவரை மதிக்கிறோம். அவரது சேவையை மெச்சுகிறோம். ஆயினும் முஹ்யித்தீன் மவ்லிதின் சில வரிகள் அவரை அல்லாஹ்வுக்கு நிகராகக் காட்டும் வகையில் அமைந்திருக்கின்றன. அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் நிகழ்த்தியதாக இந்த மவ்லிதில் கூறப்படும் அற்புதங்கள் குர்ஆன், ஹதீசுடன் நேரடியாக மோதும் வகையில் அமைந்திருக்கின்றன.

இந்த மவ்லிதில் கூறப்படும் அற்புதங்களை ஒவ்வொன்றாக நாம் அலசுவோம்.

1 இடம் பிடித்துக் கொடுத்த வானவர்கள்

**وهو سراج المصطفى * قال افسحوا أهل الصبا**

**له متى جا مكتبا * أملاك حفظ للعباد**

இந்த மவ்லிதின் நான்காவது பாடலில் காணப்படும் வரிகள் இவை.

பொருள் வருமாறு:

இவர் நபி (ஸல்) அவர்களின் விளக்காவார். இவர் ஆரம்பப் பாடசாலைக்கு வந்த போது சிறுவர்களே இவருக்கு இடமளியுங்கள் என்று பாதுகாக்கும் வானவர்கள் இவரது சக மாணவர்களிடம் கூறினார்கள்.

இந்த மவ்லிதின் பாடல்களுக்கு விளக்கவுரையாக ஹிகாயத் எனும் உரை நடைப் பகுதி உள்ளது. அதில் இன்னும் விரிவாகப் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்த போது அல்லாஹ்வின் நேசருக்கு இடமளியுங்கள் என்று என்னைச் சூழ இருந்த மாணவர்களிடம் அல்லாஹ்வின் அனுமதியுடன் வானவர்கள் கூறியதை நான் கேட்டேன் என்று அப்துல் காதிர் ஜீலானி கூறினார்.

இவ்வாறு உரை நடைப் பகுதியில் கூறப்படுகிறது.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களே இதைக் கூறினார்கள் என்றால் அவரது காலத்தில் எழுதப்பட்ட எந்த நூலில் இந்த நிகழ்ச்சி கூறப்பட்டிருக்கிறது? எந்த நூலிலும் கூறப்படவில்லை. அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் மரணித்த பின்னரே அவர்கள் பெயரால் இந்தக் கதை புனையப்பட்டது. இது ஒன்றே இது பொய்க் கதை என்பதற்குப் போதுமான சான்றாகும். இந்தக் கதையில் மறைந்து கிடக்கும் மற்றும் சில அபத்தங்களாலும் இது பொய் என்பது மேலும் உறுதியாகின்றது.

## மலக்குகளை மனிதர்கள் காண முடியுமா?

மலக்குகள் மக்களுக்குத் தென்படும் வகையில் சர்வ சாதாரணமாக நடமாடிக் கொண்டிருக்க மாட்டார்கள். நபிமார்களின் காலத்தில் மலக்குகள் சில வேளை மனித வடிவில் வந்துள்ளனர். வந்தவர்கள் மலக்குகள் தாம் என்பதைத் தெளிவுபடுத்த நபிமார்கள் இருந்தனர்.

ஒரு முறை ஜிப்ரீல் (அலை) அவர்கள் மனித வடிவில் வந்தனர். வந்தவர் ஜீப்ரீல் தாம் என்று நபி (ஸல்) அவர்கள் விளக்குவதற்கு முன்னர் நபித்தோழர்கள் யாரும் அவர் ஜிப்ரீல் என அறிய முடியவில்லை என்பதை ஹதீஸ் நூல்கள் கூறுகின்றன.

பார்க்க: புகாரி 50, 4777

இந்தச் சமுதாயத்திலேயே மிகச் சிறந்தவர்களான நபித்தோழர்களுக்கே ஒரு வானவர் வந்ததை அறிய முடியவில்லை என்றால் அப்துல் காதிர் ஜீலானி எப்படி அறிந்து கொண்டார்? அவருக்கு இறைவனிடமிருந்து இது பற்றி வஹீ (இறைச் செய்தி) ஏதும் வந்ததா?

* நபிமார்கள் அல்லாதவர்கள் ஏதேனும் பிரமையில் மலக்கு நடமாடுவதாகக் கருதி விடலாம்.

* அல்லது ஷைத்தான்களின் நடமாட்டத்தைக் கண்டு மலக்குகள் என்று முடிவு செய்து விடக்கூடும்.

* அல்லது தனக்கு மதிப்பை அதிகப்படுத்திக் கொள்ள இவ்வாறு ஒருவர் பொய் கூறவும் கூடும்.

* அல்லது தமது தவறுகளை நியாயப்படுத்திட மலக்குகள் இவ்வாறு தம்மிடம் கூறியதாக ஒருவர் கதையளக்கவும் கூடும்.

வஹீயின் தொடர்பு இருப்பவர்கள் மட்டுமே, வந்தது மலக்குகள் தாம் என்பதை உறுதிப்படுத்திட முடியும். வஹீ (இறைச் செய்தி) என்னும் தொடர்பு இல்லாதவர் இவ்வாறு கூறும் போது அதை நம்பக் கூடாது.

உமக்கு அறிவு இல்லாததை நீ பின்பற்றாதே! செவி, பார்வை, உள்ளம் ஆகிய அனைத்துமே விசாரிக்கப்படுபவை. (அல்குர்ஆன் 17.36) என்று அல்லாஹ் கூறுகிறான்.

## மலக்குகளின் பணிகள்

வஹீயைக் கொண்டு வரவும், அல்லாஹ்வின் தண்டனையை நிறைவேற்றவும், நன்மை தீமைகளைப் பதிவு செய்யவும் மற்றும் பல பணிகளுக்காகவும் மலக்குகள் நியமிக்கப்பட்டுள்ளனர். அந்தந்த மலக்குகள் இறைவனால் நியமிக்கப்பட்ட பணிகளை மட்டுமே செய்வார்கள். எந்தப் பணிக்காக அவர்கள் நியமிக்கப்படவில்லையோ அதைச் செய்ய மாட்டார்கள்.

அவர்கள் அவனை முந்திப் பேச மாட்டார்கள். அவனது கட்டளைப்படியே செயல்படுவார்கள்.

(அல்குர்ஆன் 21.27)

நம்பிக்கை கொண்டோரே! உங்களையும், உங்கள் குடும்பத்தினரையும் நரகை விட்டுக் காத்துக் கொள்ளுங்கள்! அதன் எபொருள் மனிதரும், கற்களுமாகும். அதன் மேல் கடுமையும், கொடூரமும் கொண்ட வானவர்கள் உள்ளனர். தமக்கு அல்லாஹ் ஏவியதில் மாறு செய்ய மாட்டார்கள். கட்டளையிடப்பட்டதைச் செய்வார்கள்.

(அல்குர்ஆன் 66.6)

வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ள உயினங்களும், வானவர்களும் அல்லாஹ்வுக்கே ஸஜ்தாச் செய்கின்றனர். வானவர்கள் பெருமையடிக்க மாட்டார்கள். தமக்கு மேலே இருக்கும் தமது இறைவனை அவர்கள் அஞ்சுகின்றனர். கட்டளையிடப்பட்டதைச் செய்கின்றனர்.

(அல்குர்ஆன் 16.49, 50)

கண்காணிப்புப் பணியில் உள்ள மலக்குகள் அப்துல் காதிர் ஜீலானிக்காக பராக் கூறியதாக இந்தக் கதை கூறுகிறது. கண்காணிப்புப் பணியில் உள்ள மலக்குகளுக்கு இப்படி ஒரு பணி ஒதுக்கப்படவில்லை.

மனிதனுக்கு முன்னரும், பின்னரும் தொடர்ந்து வருவோர் (வானவர்) உள்ளனர். அல்லாஹ்வின் கட்டளைப்படி அவனைக் காப்பாற்றுகின்றனர். தம்மிடம் உள்ளதை ஒரு சமுதாயம் மாற்றிக் கொள்ளாத வரை அச்சமுதாயத்தில் உள்ளதை அல்லாஹ் மாற்ற மாட்டான். ஒரு சமுதாயத்திற்கு அல்லாஹ் தீங்கை நாடும் போது அதைத் தடுப்போர் இல்லை. அவர்களுக்கு அவனன்றி உதவி செய்பவரும் இல்லை.

(அல்குர்ஆன் 13.11)

அவனே தனது அடியார்கள் மீது ஆதிக்கம் செலுத்துபவன். உங்களுக்குப் பாதுகாவலர்களை அவன் அனுப்புகிறான். எனவே உங்களில் ஒருவருக்கு மரணம் ஏற்படும் போது நமது தூதர்கள் அவரைக் கைப்பற்றுகிறார்கள். அவர்கள் (அப்பணியில்) குறை வைக்க மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 6:61)

ஒவ்வொரு ஆத்மாவுக்கும் ஒரு பாதுகாவலர் இல்லாமலில்லை.

(அல்குர்ஆன் 86.4)

நிச்சயமாக உங்கள் மீது பாதுகாவலர்கள் உள்ளனர். அவர்கள் கண்ணியமிக்க எழுத்தர்கள். நீங்கள் செய்பவற்றை அவர்கள் அறிகிறார்கள்.

(அல்குர்ஆன் 82.10)

மனிதர்கள் செய்யும் நன்மை தீமைகளைப் பதிவு செய்வதும், அல்லாஹ்வின் கட்டளைப்படி மனிதர்களைப் பாதுகாப்பதும் ஆகிய இரண்டு பணிகள் மட்டுமே பாதுகாப்புப் பணியிலுள்ள மலக்குகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. அப்துல் காதிர் ஜீலானிக்கு மட்டுமின்றி ஒவ்வொரு மனிதருக்கும் இத்தகைய மலக்குகள் நியமிக்கப்பட்டுள்ளனர். இதை இவ்வசனங்களிலிருந்து அறியலாம்.

அப்துல் காதிர் ஜீலானியைக் கண்காணித்து அவரது நன்மை தீமைகளைப் பதிவு செய்யக் கடமைப்பட்ட மலக்குகள் அவருக்கு பராக் சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்றும், பள்ளிக்கூடத்தில் இடம் பிடித்துக் கொடுத்தார்கள் என்றும் கூறும் இந்தக் கதை மேற்கண்ட வசனங்களுடன் நேரடியாக மோதுகின்றது. இந்தக் கதை பொய் என்பதற்கு இதுவும் சான்றாக அமைந்துள்ளது.

## அல்லாஹ்வின் நேசர் யார்?

அல்லாஹ்வின் நேசருக்கு இடம் கொடுங்கள் என்று மலக்குகள் கூறியதாக இந்தக் கதையில் கூறப்படுகின்றது.

கவனத்தில் கொள்க! அல்லாஹ்வின் நேசர்களுக்கு எந்தப் பயமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். அவர்கள் (இறைவனை) நம்புவார்கள். (அவனை) அஞ்சுவோராக இருப்பார்கள்.

(அல்குர்ஆன் 10.62,63)

இறையச்சத்தின் மூலமே ஒருவர் இறை நேசராக முடியும். இறையச்சம் என்பது பருவ வயதை அடைந்த பின் அல்லாஹ்வின் கட்டளைகளைச் செயல்படுத்தி, அவனது விலக்கல்களிலிருந்து விலகி நடப்பதால் தான் ஏற்படும். பருவ வயதை அடையாத சிறுவர்கள் குறித்து இறை நேசர்கள் என்றோ இறை நேசர்கள் இல்லை என்றோ கூற முடியாது.

பத்து வயதுப் பாலகரான அப்துல் காதிர் ஜீலானியை இறை நேசர் என்று மலக்குகள் நிச்சயம் கூறியிருக்க முடியாது. ஒருவர் விபரமறிந்து தமது நடத்தையின் மூலமாகத் தான் இறை நேசராக ஆக முடியும் என்பதற்கு மாறாக, பிறப்பால் இறை நேசராகி விட்டதாக இந்தக் கூற்று தெவிக்கின்றது. இந்தக் காரணத்தினாலும் இது பொய் என்பது மேலும் உறுதியாகின்றது.

அப்துல் காதிர் ஜீலானியை உயர்த்துவதற்காக மலக்குகளின் பெயரைப் பயன்படுத்திக் கதையளந்துள்ளனர் என்பதே உண்மை. இது போல் இன்னும் பல கதைகள் உள்ளன.

## 2 கைக்குழந்தை நோற்ற நோன்பு

முஹ்யித்தின் மவ்லிதில் இடம் பெற்றுள்ள மற்றொரு அற்புதக் கதையைப் (?) பார்ப்போம்.

اذ غم غرة الصيام *قالت لهم ذات الفطام

لم يلقم اليوم الغلام * ثديا لها اهل المراد

அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் கைக்குழந்தையாக இருந்த போது மேகம் பிறையை மறைத்து, ஷஃபான் மாதத்தின் கடைசி நாளா? ரமளான் மாதத்தின் முதல் நாளா? என்ற சந்தேகம் மக்களுக்கு ஏற்பட்டது. உடனே மக்கள் அப்துல் காதிர் ஜீலானியின் தாயாடம் சென்று விளக்கம் கேட்டனர். அதற்கவர் எனது மகன் இன்று எனது மார்பகத்தைச் சுவைக்கவில்லை என்று கூறினாராம்.

அதாவது ரமளானின் முதல் நாள் என்பதால் தாய்ப்பால் அருந்தாமல் அந்தக் குழந்தை நோன்பிருந்ததாம். மக்களும் இதை ஆதாரமாகக் கொண்டு அந்த நாள் ரமளானின் முதல் நாள் தான் என்று முடிவு செய்தார்களாம்.

நோன்பின் தலைப் பிறை மேகத்தில் மறைந்த போது அப்துல் காதிர் ஜீலானியின் தாயார் மக்களை நோக்கி எனது மகன் எனது மார்பகத்தைச் சுவைக்கவில்லை என்று கூறினார்.

மவ்லிதின் இந்த வரிகளுக்கு ஹிகாயத் என்னும் பகுதி பின்வருமாறு விளக்கம் தருகின்றது.

என் மகன் ரமளான் மாதம் முழுவதும் ரமளானின் தலைப்பிறை மேகத்தில் மறைந்தது. இது குறித்து மக்கள் என்னிடம் கேட்டனர். நான் அவர்களிடம் என் மகன் இன்று எனது மார்பகத்தைச் சுவைக்கவில்லை எனக் கூறினேன். பின்னர் அது ரமளானின் முதல் நாள் என்பது தெளிவாயிற்று என்று அப்துல் காதிர் ஜீலானியின் தாயார் ஃபாத்திமா கூறினார்.

இந்தக் கதையில் ஏராளமான அபத்தங்களும், மார்க்க முரண்களும் மலிந்துள்ளன. அவற்றை ஒவ்வொன்றாக நாம் அலசுவோம்.

இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தால் இந்த ஆச்சர்யமான(?) நிகழ்ச்சியை அன்றைய மக்கள் அனைவரும் அறிந்திருப்பார்கள். அப்துல் காதிர் ஜீலானியின் காலத்திலோ, அதற்கடுத்த காலத்திலோ எழுதப்பட்ட நூல்களில் இது குறிப்பிடப்பட்டிருக்கும். அவர்கள் மரணித்து பல ஆண்டுகளுக்குப் பின் எழுதப்பட்ட மவ்லிது போன்ற ஆதாரமற்ற நூற்களில் மட்டுமே இந்த விபரம் குறிப்பிடப்படுகின்றது.

நோன்பு உள்ளிட்ட சட்டங்கள் பருவ வயது வந்தவருக்குரியவை. அந்த வயதுக்கு முன் எவ்விதமான கடமையும் கிடையாது. நோன்பைப் பொறுத்தவரை, பருவ வயதை அடைந்தவர்களிலும் சிலருக்கு விலக்களிக்கப்பட்டுள்ளது. முதியவர்கள், நோயாளிகள், பயணிகள், பாலுட்டும் அன்னையர், கர்ப்பிணிகள் போன்றோர் நோன்பைப் பின்னர் நோற்கலாம் எனச் சலுகை வழங்கப்பட்டுள்ளனர். இந்த நிலையில் கைக்குழந்தைக்கு நோன்பு என்பது கற்பனை செய்ய முடியாததாகும்.

அப்துல் காதிர் ஜீலானி பிறவியிலேயே இறை நேசராகத் திகழ்ந்தார் என்று வாதத்துக்காக ஏற்றுக் கொண்டாலும் இந்தக் கதையை ஏற்க முடியாது. இறை நேசர் என்பவர் இறைவனின் மார்க்கத்தை நன்றாக அறிந்திருக்க வேண்டும். குழந்தைகளுக்கு நோன்பு இல்லை என்ற சட்டத்தைக் கூட அறியாதவர் எப்படி இறை நேசராக இருக்க முடியும்? இவ்வாறு சிந்திக்கும் போதும் இது இட்டுக்கட்டப்பட்ட பொய் என்பதை அறியலாம்.

முதல் பிறையை மேகம் மறைத்தால் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கற்றுத் தந்துள்ளனர்.

நீங்கள் பிறை கண்டு நோன்பு இருங்கள். (அடுத்த) பிறை கண்டு நோன்பை விடுங்கள். மேகம் மூடிக் கொள்ளுமானால் (முதல் மாதத்தை) முப்பது நாட்களாக முழுமைப்படுத்துங்கள் என்பது நபி (ஸல்) காட்டிய வழிமுறை.

அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)

நூல் : புகாரி 1909

மேக மூட்டம் காரணமாகப் பிறை தென்படாவிட்டால் அந்த நாளை முதல் மாதத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும்; ரமளான் என்று முடிவு செய்யக் கூடாது என்பதை இந்த ஹதீஸ் தெளிவாகக் கூறுகின்றது.

மவ்லிது அபிமானிகளாகிய மத்ஹப்வாதிகள் உட்பட அனைவரும் அறிந்த, ஏற்றுக் கொண்ட உண்மை இது. மார்க்கத்தில் ஈடுபாடும் மற்றும் மார்க்க அறிவும் குறைந்து காணப்படும் இந்தக் காலத்து மவ்லவிகள் கூட அறிந்து வைத்திருக்கின்ற சட்டம் இது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தந்த இந்தச் சட்டம் மார்க்க அறிவு நிறைந்திருந்த அந்தக் காலத்து மக்களுக்குத் தெரியவில்லையாம்! பிறவியிலேயே(?) இறை நேசராகத் திகழ்ந்த அப்துல் காதிர் ஜீலானிக்கும் இந்தச் சட்டம் தெரியவில்லையாம்!.

மேகத்திற்குள் மறைந்திருந்த பிறையைக் கண்டுபிடித்த அப்துல் காதிர் ஜீலானிக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காட்டிய வழிமுறை தெரியவில்லை என்பது அப்துல் காதிர் ஜீலானிக்குப் பெருமை சேர்ப்பதாக இல்லை.

இந்தக் கதையை நம்பினால் ஏற்படும் விளைவுகளை மவ்லிது அபிமானிகள் சிந்திப்பார்களா?

ஷி அப்துல் காதிர் ஜீலானி காலத்தில் வாழ்ந்த மக்கள் மார்க்க அறிவற்ற மூடர்களாக இருந்துள்ளனர். (இத்தகைய மூடர்களிடம் தான் பிற்காலத்தில் அப்துல் காதிர் ஜீலானி கல்வி கற்றதாகவும் கதை உள்ளது)

ஷி அப்துல் காதிர் ஜீலானிக்கு நபிவழி தெயவில்லை;

ஷி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காட்டிய வழிமுறைக்கு நேர் முரணான வழியை மக்களுக்குக் காட்டி மக்களை அவர் வழிகெடுத்தார்

ஷி அவரது தாயாரும் இதற்கு உடந்தையாக இருந்துள்ளார்.

இவ்வாறு நம்பத் தயாராக இல்லாவிட்டால் இந்தக் கதையையும் அதைக் கூறுகின்ற முஹ்யித்தீன் மவ்லிதையும் தூக்கி எறிய வேண்டும்.

மவ்லிது அபிமானிகளே! இந்த மவ்லிதைத் தூக்கி எறிந்து விட்டு அப்துல் காதிர் ஜீலானிக்குப் பெருமை சேர்க்கப் போகிறீர்களா? அல்லது இந்த மவ்லிதைத் தூக்கிப் பிடித்து அப்துல் காதிர் ஜீலானி அவர்களை இழிவுபடுத்தப் போகிறீர்களா?

## 3 அப்துல் காதிர் ஜீலானியிடம் முறையிட்ட ஷரீஅத்

முஹ்யித்தின் மவ்லிதில் இடம் பெற்றுள்ள மற்றொரு அபத்தமான கதையைப் பார்ப்போம்.

قال اخرجن لابن الحمام *من ضلع بغداد المقام

لما شكا الدين القوام *مع سلب حاله السداد

وكلما رام الدخول *خر فمن له حمول

يا طالب اسمع ما يقول *فيه ثقات باستناد

அப்துல் காதிர் ஜீலானி அவர்களிடம் இப்னுல் ஹமாம் என்பாரைப் பற்றி தீன் (மார்க்கம்) முறையிட்ட போது அவரை பாக்தாதை விட்டும் வெளியேறச் சொன்னார்கள். அவர் பாக்தாதில் நுழைய நாடும் போதெல்லாம் குப்புற விழுந்து விடுவார். அவரைச் சுமந்து வருபவர்களும் விழுந்து விடுவார்கள். (நல்லதைத்) தேடுபவனே நம்பகமானவர்கள் சான்றுடன் கூறுவதைச் செவிதாழ்த்திக் கேள் என்பது இந்தக் கவிதை வரிகளின் பொருள்.

கதை என்னவென்று விளங்கவில்லையா? கவலையை விடுங்கள்! மவ்லிதின் விளக்கவுரையாக உள்ள ஹிகாயத் பகுதி கவலையை நீக்குகின்றது. இந்தக் கதையை விளக்கமாக ஹிகாயத் எடுத்துரைக்கிறது.

**عن أبى الحسن بن علي أن ابا بكر الحمامي كان من ذوى الاحوال الرضية والافعال المرضية وقال له الشيخ رضي الله عنه الشريعة تشكو منك بما اعتديت منها فنهاه عن امور فلم ينته عنها فامر على صدره كفه وما احتفه**

**فسلبت حاله وخرج الى العراق سريعا وكلما هم بدخول بغداد سقط لوجهه صريعا وان حمله احد ليدخله به سقطا جميعا وكان بينه وبين الشيخ المظفر رابطة المحبة فرأى ربه يوما فى واقعة الجذبة فقال الله تعالى له تمن علي يا ابا مظفر فقال يارب اتمنى رد حال ابي بكر المقصر فقال الله تعالى له ذلك عند وليي فى الدارين عبد القادر**

அபூபக்கர் அல்ஹமாம் என்பவர் இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட நிலையுடையவராகவும் இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட செயல்கள் உடையவராகவும் இருந்தார். அவரிடம் அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் நீ வரம்பு மீறியதால் உன்னைப் பற்றி ஷரீஅத் என்னிடம் முறையிடுகிறது என்று கூறினார்கள். மேலும் சில காரியங்களை விட்டும் அவரைத் தடுத்தார்கள். அவர் தவிர்த்துக் கொள்ளவில்லை. அவரது நெஞ்சில் கையை வைத்து அபூபக்கரே பாக்தாத்தை விட்டும், அதன் சுற்றுப்புறத்தை விட்டும் வெளியேறு என்றும் கூறினார்கள்.

உடனே அவரது (விலாயத்) நிலை நீக்கப்பட்டது. அவர் இராக்கை நோக்கி விரைந்தார். அவர் பாக்தாதில் நுழைய முயன்றபோதெல்லாம் முகம் குப்புற வீழ்ந்தார். அவரைப் பாக்தாதுக்குள் கொண்டு வர யாரேனும் அவரைச் சுமந்து வந்தால் இருவரும் சேர்ந்து விழுவார்கள்.

அபூபக்கர் அல்ஹமாம் என்பவர் இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட நிலையுடையவராகவும் இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட செயல்கள் உடையவராகவும் இருந்தார் என்று மேற்கண்ட கதையில் கூறப்படுகிறது. ஒருவர் இறைவனால் பொருந்திக் கொள்ளப்பட்டவரா? இல்லையா? என்பது இறைவனுக்கு மட்டுமே தெரிந்த, இறைவனைத் தவிர எவராலும் அறிந்து கொள்ள முடியாத இரகசியமாகும்.

தூதர்களில் நான் புதியவன் அல்லன். எனக்கோ, உங்களுக்கோ என்ன செய்யப்படும் என்பதை அறிய மாட்டேன். எனக்கு அறிவிக்கப்படுவதைத் தவிர வேறு எதையும் நான் பின்பற்றவில்லை. நான் தெளிவாக எச்சரிக்கை செய்பவனே தவிர வேறில்லை  எனக் கூறுவீராக!

(அல்குர்ஆன் 46:9)

நபிகள் நாயகத்தை மேற்கண்டவாறு இறைவன் கூறச் சொல்கிறான் என்றால் அபூபக்கர் அல்ஹம்மாம் என்பவர் இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட நிலையுடையவர் என்பது எப்படித் தெரிந்தது?

இறைவனால் திருப்தி கொள்ளப்பட்ட நிலையுடையவரைப் பற்றி ஷரீஅத் எப்படி முறையிடும்?

ஷரீஅத் என்பது பகுத்தறிவுள்ள மனிதனா? அப்படியே முறையிடுவதாக இருந்தாலும் ஷரீஅத்துக்குச் சொந்தக்காரனாகிய அல்லாஹ்விடம் முறையிடாமல் இவரிடம் ஏன் முறையிட்டது?

இம்மார்க்கம் முழுமையாக அல்லாஹ்வுக்கே உரியது  என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 3:154)

கவனத்தில் கொள்க! தூய இம்மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியது.

(அல்குர்ஆன் 39:3)

ஷரீஅத்துக்கு முரணான செயலைச் செய்பவர் பாக்தாதை விட்டும் வெளியேற வேண்டும் என்றால் பக்தாதில் ஷரீஅத்துக்கு மாற்றமாக எவருமே நடக்கவில்லையா?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் ஷரீஅத்துக்கு மாற்றமான காரியங்களைச் செய்பவர்கள் மதீனாவில் இருந்தனர்; முனாபிக்குகள் இருந்தனர்; யூதர்களும் இருந்தனர். அவர்களை எல்லாம் மதீனாவை விட்டு வெளியேறுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிடாத போது இவருக்கு என்ன அதிகாரம் உள்ளது? பக்தாத் நகரம் மக்கா, மதீனா போன்ற புனித நகரமா? இப்னுல் ஹம்மாம் தஜ்ஜாலா?

பொய் தன்னைத் தானே அடையாளம் காட்டிப் பல்லிளிப்பதைப் பாருங்கள்!

## 4 அல்லாஹ்வைக் கண்ட முளப்பர்

**وكان بينه وبين الشيخ المظفر رابطة المحبة فرأى ربه يوما فى واقعة الجذبة فقال الله تعالى له تمن علي يا ابا مظفر فقال يارب اتمنى رد حال ابي بكر المقصر فقال الله تعالى له ذلك عند وليي فى الدارين عبد القادر**

முளப்பர் எனும் பெரியாருக்கும் மேற்கண்ட அபூபக்ர் என்பாருக்கும் இடையே நட்பு இருந்தது. ஜத்பு (தன்னை மறந்த நிலை) ஏற்பட்ட போது முளஃப்பர் அவர்கள் அல்லாஹ்வைக் கண்டார்கள். அப்போது அவரிடம் முளஃப்பரே நீ விரும்பியதைக் கேள் என்று அல்லாஹ் கூறினான். குற்றம் செய்த அபூபக்ரை அவருடைய பழைய நிலைக்கு நீ மாற்ற வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன் என்று முளஃப்பர் கூறினார். அதற்கு இறைவன் அந்த அதிகாரம் இரு உலகிலும் எனது நேசரான அப்துல் காதிரிடம் தான் அந்த அதிகாரம் உள்ளது என்று கூறினான்.

பக்தி முற்றிப் போய் தன்னிலை மறப்பதை ஜத்பு என்று கூறுகிறார்கள். இத்தகைய நிலை இஸ்லாத்தில் உண்டா? நிச்சயமாக இல்லை.

அல்லாஹ்வின் நினைவில் அதிகமாக ஊறிய நபிமார்கள் ஜத்பு நிலையை அடைந்ததில்லை. நபித்தோழர்களும் ஜத்பு நிலையை அடைந்ததில்லை.

அல்லாஹ்வின் நினைவு பைத்தியத்தைத் தெளிவிக்குமே தவிர பைத்தியம் பிடிக்குமளவுக்கு யாரையும் கொண்டு செல்லாது.

இவருக்கோ ஜத்பு எனும் பைத்தியம் ஏற்பட்டதாம். அந்த ஜத்பு நிலையில் அவர் அல்லாஹ்வைப் பார்த்தாராம். எந்த மனிதனும் இவ்வுலகில் அல்லாஹ்வைக் காண முடியாது என்று திருக்குர்ஆனும் நபிமொழிகளும் திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்றன.

எந்தப் பார்வைகளும் அவனை அடைய முடியாது.

(அல்குர்ஆன் 6.103) என்று அல்லாஹ் கூறுகிறான்.

மூஸா நபியால் அல்லாஹ்வைப் பார்க்க இயலவில்லை என்பதை அல்குர்ஆன் 7.143 வசனம் கூறுகிறது.

அவனோ ஒளிமயமானவன், அவனை எப்படி நான் காண முடியும்? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

(முஸ்லிம் 261)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் பார்த்ததாக எவன் சொல்கிறானோ அவன் பொய் கூறி விட்டான் என ஆயிஷா (ரலி) கூறியுள்ளனர்.

(புகாரி 4855)

யாரும் இறைவனை இவ்வுலகில் காண முடியாது என்பதற்கு இவை சான்றுகள். இந்தச் சான்றுகளுக்கு மாற்றமாக இந்தப் பெயார் அல்லாஹ்வைப் பார்த்ததாக மவ்லிது எழுதியவர் கதை விடுகிறார்.

மனிதர்களுடன் எவற்றைப் பேச அல்லாஹ் விரும்பினானோ அவற்றையெல்லாம் குர்ஆனாக வழங்கி விட்டான். எவரிடமும் இறைவன் பேச வேண்டிய எந்தத் தேவையும் கிடையாது என்ற சாதாரண அறிவு கூட மவ்லிதை எழுதியவருக்கு இல்லை.

நபியவர்களோ அல்லாஹ்வை நேரடியாகக் காணவில்லை. முளப்பர் என்பாரிடம் அல்லாஹ்வே நேரடியாகப் பேசினான் என்றால் நபியவர்களை விடவும் இவர் சிறந்தவராகி விடுகிறார். நபியவர்களை விடவும் இறைத் தொடர்பு அதிகமுடையவராக இருக்கிறார் என்று ஆகின்றது. நபிகள் நாயகத்தை விட ஒருவனுடைய ஆன்மீகச் சிறப்பை உயர்த்திச் சொல்கின்ற, குர்ஆனுடனும் நபிமொழிகளுடனும் நேரடியாக மோதுகின்ற இந்த மவ்லிதை வாசிப்பதால் பாவம் தான் ஏற்படும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

அல்லாஹ்விடம் முளப்பர் ஒரு கோரிக்கையை எடுத்து வைக்கிறார். அந்த அதிகாரம் எனக்கு இல்லை. அப்துல் காதிருக்கே உரியது என்று அல்லாஹ் கூறிவிட்டான் என்று இந்தக் கட்டுக்கதை கூறுகிறது என்றால் இவர்களின் சூழ்ச்சி நமக்குத் தெளிவாகத் தெரிந்து விடுகின்றது.

மன்னிக்கும் அதிகாரம் தனக்கேயுரியது என்று இறைவன் உரிமை கொண்டாடுவதைத் திருக்குர்ஆனில் காண்கிறோம்.

அவர்கள் வெட்கக்கேடானதைச் செய்தாலோ, தமக்குத் தாமே தீங்கு இழைத்துக் கொண்டாலோ அல்லாஹ்வை நினைத்து தமது பாவங்களுக்கு மன்னிப்புத் தேடுவார்கள். அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யார்? தாங்கள் செய்ததில் தெரிந்து கொண்டே அவர்கள் நிலைத்திருக்க மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 3:135)

அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புத் தேடுவீராக! அல்லாஹ் மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையோனாகவும் இருக்கிறான்.

(அல்குர்ஆன் 4:106)

இந்த அதிகாரத்தை அவன் எவருக்கும் பங்கிட்டு கொடுக்கவில்லை. நபியவர்கள் கூட அல்லாஹ்விடம் தான் பாவமன்னிப்புத் தேடியுள்ளனர்.

இந்தக் கதையோ மன்னிக்கும் அதிகாரம் அப்துல் காதிர் ஜீலானிக்கு உரியது எனக் கூறுகிறது. அல்லாஹ்வுக்கும் மேல் அப்துல் காதிரை சூப்பர் பவர் உடையவராக இக்கதை காட்டுகிறது. ஆம் இந்த மவ்லிதை எழுதியவர்களின் திட்டம் அது தான்.

அல்லாஹ்வை ஒன்றுமற்றவனாக்கி அவனது நபிமார்களையும் தாழ்த்தி, அவர்களை விட அப்துல் காதிர் ஜீலானி உயர்ந்தவர், ஆற்றலுள்ளவர் என்று காட்டுவது தான் அவர்களின் திட்டம். அதற்குத் தான் அல்லாஹ்வின் பெயரைப் பயன்படுத்தி அவன் மீது இட்டுக்கட்டியுள்ளனர்.

அல்லாஹ்வின் பெயரால் இட்டுக்கட்டப்படுபவனை விட அநியாயக்காரன் யாருக்க முடியும்?

(அல்குர்ஆன் 6.21)

இந்த வசனத்தின் படி மிகப்பெரிய அக்கிரமக்காரன் ஒருவனே இந்த மவ்லிதை எழுதியிருக்க வேண்டும் என்று கூறலாம்.

இதன் பின்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் முளஃஃபரிடம் வந்து பின் வருமாறு கூறியதாகவும் கதை விட்டுள்ளனர்.

இதன் பின்னர் முளப்பரிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முளப்பரே எனது பிரதிநிதி அப்துல் காதிரிடம் செல்வீராக. எனது துய மார்க்கத்திற்காகவே அபூபக்கரை வெறுக்கிறீர். இப்போது அவரை நான் மன்னித்து விட்டேன். எனவே அவரிடமிருந்து பிடுங்கிக் கொண்ட நல்ல நிலையைத் திரும்பக் கொடுத்து விடுவீராக என்று உமது பாட்டனார் கூறினார் என்று தெரிவிப்பீராக என்றனர்

என்று இந்த மவ்லிதை எழுதியவர் கதை விடுகிறார்.

அபூபக்கர் என்பாரின் நல்ல நிலையைப் பிடுங்கியதே அப்துல் காதிர் தானாம். அல்லாஹ்வின் ராஜ்ஜியத்திற்குள் இவர் தனியொரு ராஜ்ஜியமே நடத்தியிருக்கிறார் என்றும் இந்தக் கதை கூறுகிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை யார் நேரடியாகப் பார்த்தார்களோ அவர்கள் மட்டுமே கனவிலும் பார்க்க முடியும். யார் என்னைக் கனவில் காண்கிறாரோ விழிப்பிலும் என்னைக் காண்பார் என்ற நபிமொழியிலிருந்து இதை அறியலாம்.

(புகாரி 6993)

நபியவர்கள் காலத்தில் வாழாத ஒருவர், அவர்களை நேரில் பார்த்திராத ஒருவர், அவர்களுக்கு ஐநூறு வருடங்களுக்குப் பின்னர் வாழ்ந்த ஒருவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்ததாகக் கூறினால் அது வடிகட்டிய பொய் என்பதில் ஐயமில்லை. மேலும் அல்லாஹ் மன்னிக்காத ஒருவரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மன்னித்ததாகக் கூறி, குர்ஆனையும் ஹதீஸையும் அவமதிக்கிறார்கள்.

அப்துல் காதிர் ஜீலானியைக் கடவுளாகவும், கடவுளின் அவதாரமாகவும் சித்தரித்திருப்பது இதிலிருந்து தெளிவாக விளங்குகிறது. நபியவர்களை விடவும் அவரை உயர்த்த எவ்வளவு கீழ்த்தரமான கற்பனையில் இறங்கியுள்ளனர்? எத்தனை குர்ஆன் வசனங்களை நிராகரித்துள்ளனர்? எத்தனை நபிமொழிகளை அலட்சியப்படுத்தியுள்ளனர்?

இவ்வளவு அபத்தங்கள் நிறைந்த மவ்லிதைப் படிப்பதால் நன்மை கிட்டுமா? பாவம் சேருமா சிந்தியுங்கள்.

முஹ்யித்தின் மவ்லிதில் கூறப்படும் மற்றொரு அதியற்புதக் கதையைக் கேளுங்கள்.

## 5 மார்க்கம் மரணப் படுக்கையில்

**رأى بفج سقيما *منه ابتغى أن يقيما**

**لما غدا مستقيما *ناداه أن يا قوامي**

**إني لدين الرشاد *أحييتني كي ينادي**

**لكم به كل نادي *يا محيي الدين حامي**

முஹ்யித்தின் மவ்லிதில் உள்ள ஐந்தாம் பாடலின் சில வரிகள் இவை. இதன் பொருள் வருமாறு.

அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் ஒரு நோயாளியைக் கண்டார்கள். அந்த நோயாளி தம்மை எழுப்பி விடுமாறு அப்துல் காதிர் ஜீலானியைக் கேட்டுக் கொண்டார். எழுந்து நின்றதும், என்னை நிலை நிறுத்தியவரே நான் தான் நேரான மார்க்கம் என்னை உயிர்ப்பித்து விட்டீரே! முஹ்யித்தீனே (இம்மார்க்கத்தை உயிர்ப்பித்தவரே) என்று அந்த நோயாளி கூறினாராம்.

இந்தப் பாடல் வரிகளில் கூறப்பட்ட இந்தக் கற்பனைக் கதை ஹிகாயத் என்ற பகுதியில் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதையும் பார்த்து விட்டு இதன் அபத்தங்களை அலசுவோம்.

முஹ்யித்தீன் (இம்மார்க்கத்தை உயிர்ப்பித்தவர்) என்று உங்களுக்குப் பட்டம் கிடைக்கக் காரணம் என்ன? என்று அப்துல் காதிர் ஜீலானியிடம் கேட்கப்பட்டது. நாங்கள் பாக்தாத்துக்குச் செருப்பணியாமல் திரும்பி வந்த போது வழியில் நிறம் மாறிய நோயாளி ஒருவரைக் கண்டேன். அவர் எனக்கு ஸலாம் கூறினார். நானும் அவருக்கு ஸலாம் கூறினேன். என்னை உட்காரச் செய்யுங்கள் என்று அவர் கூறினார். நான் உட்கார வைத்தேன். அவரது உடல் வளர்ந்து நல்ல நிறத்துக்கு வந்தது. நான் யாரெனத் தெயுமா? என்று அவர் கேட்டார். நான் தெரியாது என்றேன். அதற்கவர் நான் தான் இஸ்லாமிய மார்க்கம். நான் பலவீனப்பட்டிருந்தேன். உம் மூலம் அல்லாஹ் எனக்கு உயிரூட்டினான். எனவே நீர் தாம் முஹ்யித்தீன் (இம்மார்க்கத்தை உயிர்ப்பித்தவர்) என்று கூறினார்.

உடனே நான் பள்ளிக்கு வந்தேன். அங்கே ஒருவர் எனக்காகச் செருப்பை எடுத்து வைத்து என் தலைவரே! முஹ்யித்தீனே! எனக் கூறினார். தொழுது முடிந்ததும் மக்களெல்லாம் என்னை நோக்கி விரைந்து வந்து என் கையை முத்தமிட்டு முஹ்யித்தீனே என்று கூறினார்கள். வலப்புறம், இடப்புறம் மற்றும் எல்லாத் திசைகளிலிருந்தும் மக்கள் வந்து இவ்வாறு என்னை அழைத்தார்கள். அந்த நேரத்துக்கு முன்பு வரை என்னை யாரும் இந்தப் பெயரில் அழைத்ததில்லை என்று அப்துல் காதிர் ஜீலானி கூறினார்கள்.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களின் வாழ்க்கையில் இத்தகைய நிகழ்ச்சி நடந்திருந்தால் இது மிகவும் முக்கியமான நிகழ்ச்சியாகும். இதை அவர்கள் தமது நூலில் குறிப்பிடாமல் இருந்திருக்க மாட்டார்கள். தமது உரைகளிலும் இதைத் தெரிவிக்கத் தவறியிருக்க மாட்டார்கள். அவர்களின் குன்யதுத் தாலிபீன் நூலிலோ, புதுகுல் கைப், அல்ஃபத்குர் ரப்பானி ஆகிய அவர்களின் உரைத் தொகுப்புக்களிலோ இந்த அற்புத நிகழ்ச்சி(?) கூறப்படவில்லை. அவர்களின் காலத்தில் மற்றவர்கள் எழுதிய நூற்களிலும் இந்த விபரம் கூறப்படவில்லை. அப்துல் காதிர் ஜீலானிக்குப் புகழ் சேர்க்கும் எண்ணத்தில் பிற்காலத்தவர்கள் திட்டமிட்டு இட்டுக்கட்டிக் கூறியுள்ளனர் என்பதை இதிலிருந்து சந்தேகமின்றி அறியலாம்.

மறுமையில் ஒருவனது நல்லறங்கள் மனித உருவில் வரும் என்று பல ஹதீஸ்கள் உள்ளன. ஆனால் இவ்வுலகிலேயே அவ்வாறு மனித வடிவில் வரும் என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடமோ, நபித்தோழர்களிடமோ இஸ்லாமிய மார்க்கம் மனித வடிவில் வந்து உரையாடியதில்லை. அப்துல் காதிர் ஜீலானியிடம் மட்டும் தான் இந்த மார்க்கம் மனித வடிவில் வந்திருக்கிறது என்று கூறப்படுவது இக்கதை இட்டுக்கட்டப்பட்டது என்பதை உறுதி செய்கின்றது.

அப்துல் காதிர் ஜீலானி காலத்தில் மார்க்கம் மரணப் படுக்கையில் கிடக்கவில்லை. மார்க்கத்தைப் பேணும் மக்கள் ஏராளமாக இருந்தனர். மார்க்க அறிஞர்கள் நிறைந்திருந்தனர். இஸ்லாமியக் கல்விக் கூடங்கள் பல இருந்தன.

மக்களிடம் ஒரு சில தவறுகள் காணப்பட்ட போது அப்துல் காதிர் ஜீலானியைப் போல் இன்னும் ஆயிரமாயிரம் அறிஞர்கள் அவற்றைத் திருத்தும் பணியில் ஈடுபட்டார்கள். தீனை உயிர்ப்பிக்கும் நிலையும் இருக்கவில்லை. அப்படியே இருந்தாலும் இவர் மட்டும் இந்த மார்க்கத்தை உயிர்ப்பித்தார் என்பது சரியில்லை.

இம்மார்க்கத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை இறைவன் ஏற்றுள்ளான். மார்க்கத்தை மனித வடிவில் நடமாடவிட்டால் என்ன ஆகும்? இந்த மார்க்கம் பாதுகாக்கப்பட இயலாத நிலை ஏற்பட்டுவிடும். ஒவ்வொருவனும் எதையாவது சொல்லி விட்டு, அல்லது செய்து விட்டு மார்க்கம் மனித வடிவில் வந்து இதை எனக்குக் கூறியது என்று நியாயம் கற்பிப்பான்.

எந்தத் தவறையும் இதைக் கூறி நியாயப்படுத்தலாம். இதனால் மார்க்கம் பாதுகாக்கப்படும் நிலைக்குக் குந்தகம் ஏற்படும். இதனால் தான் மார்க்கத்தை மனித வடிவிலெல்லாம் இறைவன் நடமாட விடவில்லை. இந்தக் கதையை நம்புவது சமுதாயத்தை ஏமாற்றத் தான் உதவும்.

அப்துல் காதிர் ஜீலானி காலத்தை விட மோசமான நிலையில் இன்று மார்க்கம் உள்ளது. அவரது காலத்தில் காணப்பட்டது போன்ற பேணுதல் இன்று இல்லை.

இதைப் பயன்படுத்திக் கொண்டு எவனாவது. நான் பலவீனப்பட்டிருந்தேன். உம் மூலம் அல்லாஹ் எனக்கு உயிரூட்டினான். எனவே நீர் தாம் முஹ்யித்தீன் (இம்மார்க்கத்தை உயிர்ப்பித்தவர்) என்று இஸ்லாமிய மார்க்கம் என்னிடம் கூறியது என்று உளறினால் மவ்லிது பக்தர்கள் நம்புவார்களா? அதை நம்புவதை விட இதை நம்புவதற்கு அதிகத் தகுதி இருக்கிறது என்றாலும் இவர்கள் நம்ப மாட்டார்கள். அப்படியானால் இந்தக் கதையை மட்டும் எப்படி நம்பலாம்? மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும்.

முஹ்யித்தீன் மவ்லிதில் அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் கடவுளாகச் சித்தக்கப்பட்டுள்ளார் என்பதைப் பின்வரும் வரிகளிலும் காணலாம்.

6 காய்ச்சலுக்கு இடமாற்றம்

رأى بفج سقيما *منه ابتغى أن يقيما

لما غدا مستقيما *ناداه أن يا قوامي

إني لدين الرشاد *أحييتني كي ينادي

لكم به كل نادي *يا محيي الدين حامي

தமது மகனுக்குக் காய்ச்சல் வந்திருப்பதாக ஒருவர் அப்துல் காதிர் ஜீலானியிடம் முறையிட்டார். அதற்கு அப்துல் காதிர் ஜீலானி உன் மகனின் காதில் நீ எப்போது இவனிடம் வந்தாய்? காய்ச்சலே நீ ஹில்லா என்னும் ஊருக்குச் சென்று விடு! தீங்கிழைக்காதே! இலட்சியத்தை நீ அடைந்து கொள்வாய். (காய்ச்சலுக்கு என்ன இலட்சியம் இருக்கிறதோ?) என்று அப்துல் காதிர் ஜீலானி கூறியதாகக் கூறு என்றார்கள்.

இந்தக் கவிதை வரிகளுக்கு விளக்கவுரையாக ஹிகாயத் எனும் பகுதியில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

**وحكي ان ابا المعالى اتى الشيخ رضي الله عنه وقال ان ابني لم تفارقه الحمى منذ خمسة عشر شهرا فقال قل في اذنه متى اصرعته يا ام ملدم يقول لك الشيخ ارتحلي الى الحلة كرها وقسرا ففعل ما امر به فلم تعد اليه بعد ثم جاء الخبر ان اهل الحلة وهم الروافض يحمون كثيرا سرا وجهرا**

அபுல் மஆலி என்பார் அப்துல் காதிர் ஜீலானியிடம் வந்து என் மகனுக்குப் பதினைந்து மாத காலம் காய்ச்சல் விலகாமல் உள்ளது என்றார். அதற்கு அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் காய்ச்சலே நீ எப்போது இவனைப் பிடித்தாய்? நீ ஹில்லா எனும் ஊருக்குச் சென்று விடு என்று உன் மகனுடைய காதில் கூறு என்றார்கள். அவர் கட்டளையிடப்பட்டவாறு செய்தார். அதன் பின் அவனுக்குக் காய்ச்சல் ஒரு சிறிதும் மீண்டும் வரவில்லை. பிறகு ஹில்லா எனும் ஊரில் உள்ள ராபிளிய்யா கூட்டத்தினர் அனேகர் காய்ச்சலால் பீடிக்கப்பட்டதாகச் செய்தி வந்தது.

காய்ச்சல் பதினைந்து மாத காலம் நீடிக்குமா? என்ற கேள்வியை விட்டு விடுவோம். மார்க்க அடிப்படையில் இந்தக் கதை நம்பத்தக்கது தானா?

இந்தக் கதையில் அப்துல் காதிர் ஜீலானி நோய் தீர்க்கும் அதிகாரம் பெற்றிருப்பதாகவும், நோயை வழங்கும் அதிகாரம் பெற்றிருப்பதாகவும்,

காய்ச்சல் என்ற நோயுடன் அப்துல் காதிர் ஜீலானி பேசியதாகவும் கூறப்படுகிறது.

நோய்களை வழங்குபவனும், அதை நீக்குபவனும் அல்லாஹ் தான். இந்த அதிகாரத்தில் எவருக்கும் அல்லாஹ் எந்த உரிமையையும் வழங்கவில்லை. இது இஸ்லாத்தின் அடிப்படையான கொள்கை. இதைத் திருக்குர்ஆனிலிருந்தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கையிலிருந்தும் அறியலாம்.

நான் நோயுற்றால் எனக்கு நோய் நிவாரணம் வழங்குபவன் இறைவன் என்று இப்றாஹீம் (அலை) கூறியதாக அல்லாஹ் கூறுகிறான்.

(அல்குர்ஆன் 26.80)

இந்த அப்துல் காதிர் ஜீலானியை விடப் பல கோடி மடங்கு சிறந்தவர்களான இப்றாஹீம் நபியவர்கள் அந்த அதிகாரம் இறைவனுக்கு மட்டுமே உரியது என்கிறார்கள். இவரோ நோய் தீர்க்கும் அதிகாரம் தமக்குரியது என்கிறார்.

இந்தப் பூமியிலோ, உங்களிடமோ எந்தத் துன்பம் நிகழ்ந்தாலும் அதை நாம் உருவாக்குவதற்கு முன்பே பதிவேட்டில் இல்லாமல் இருக்காது. இது அல்லாஹ்வுக்கு எளிதானது.

(அல்குர்ஆன் 57.22)

அல்லாஹ் உமக்கு ஒரு தீங்கை அளித்தால் அவனைத் தவிர அதை நீக்குபவன் யாருமில்லை. உமக்கு அவன் ஒரு நன்மையை நாடினால் அவனது அருளைத் தடுப்பவன் யாரும் கிடையாது. தனது அடியார்களில் நாடியோருக்கு அதை அளிப்பான். அவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

(அல்குர்ஆன் 10:107)

இந்த வசனங்களை நிராகரிக்கும் வகையில் இந்தக் கதை அமைந்துள்ளது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் எத்தனையோ நபித்தோழர்கள் நோய்வாய்ப்பட்டார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பத்தினரில்

பலர் நோய்வாய்ப்பட்டனர். அந்தச் சந்தர்ப்பங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அந்த நோயைப் பார்த்துப் பேசி வேறு ஊருக்குப் அனுப்பவில்லை.

ஏன்? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே கூட நோய்வாய்ப்பட்டார்கள்.

மனிதர்களின் இறைவா! இந்தத் துன்பத்தை நீக்கு! இறைவா நீ நிவாரணம் அளிப்பாயாக! உனது நிவாரணம் தவிர வேறு நிவாரணம் இல்லை என்று துஆச் செய்யுமாறு தான் அந்தச் சந்தர்ப்பங்களில் தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டனர்.

(புகாரி 5675, 5742, 5743, 5744, 5750)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கூட இல்லாத அதிகாரம் அப்துல் காதிருக்கு வழங்கப்பட்டதாக இந்தக் கதை கூறுகிறது.

அந்தச் சிறுவனிடம் இருந்த காய்ச்சலை நீக்கியதோடு இவர் நிற்கவில்லை. ஹில்லா என்று ஊருக்கு அந்தக் காய்ச்சலைத் திருப்பி விட்டாராம். கடுகளவு இஸ்லாமிய அறிவு உள்ளவன் கூட இதை நம்ப முடியாது.

உஹத் போர்க்களத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பற்கள் உடைக்கப்பட்ட போது அவர்கள் கோபமுற்று, நபியின் முகத்தில் இரத்தச் சாயம் பூசிய கூட்டத்தினர் எப்படி வெற்றி பெறுவர் என்று கூறினார்கள். உமக்கு அதிகாரத்தில் எந்தப் பங்கும் இல்லை (அல்குர்ஆன் 3.128) என்ற வசனம் இறங்கியது.

(முஸ்லிம் 3346)

எப்படி இவர்கள் வெற்றியடைய முடியும்? என்று தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். இவ்வாறு கூறுகின்ற அதிகாரம் கூட நபியவர்களுக்கு இல்லை என்று இறைவன் பிரகடனம் செய்கிறான். அப்துல் காதிர் ஜீலானியோ ஹில்லா என்ற ஊர்வாசிகளை நோக்கிக் காய்ச்சலை அனுப்பி வைத்தாராம்.

அப்துல் காதிர் ஜீலானியை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விடவும் மேலானவராக அல்லாஹ்வுக்குச் சமமானவராகக் காட்டும் இந்தக் கதையை உண்மையான முஸ்லிம் எழுதியிருப்பானா? அல்லது அன்னியர்களின் சதித் திட்டத்தில் இந்தக் கதை உருவாக்கப்பட்டதா? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

திருக்குர்ஆனுடன் நேரடியாக மோதும் இந்தக் கதையை மவ்லிது என்ற பெயரால் ஓதி வருவது நன்மையைப் பெற்றுத் தருமா? அல்லாஹ்வின் கோபத்தைப் பெற்றுத் தருமா? என்றும் சிந்தித்துப் பாருங்கள்.

## 6 மறைவான செய்திகளை அறிந்த முஹ்யித்தீன்

وعاش خضر سلاما

*بضعا وتسعين عاما

مع ما حباه الغلاما

*حفاظ خير الكلام

لسن سبع كميل

*سبع شهور قليل

கிள்று என்பார் தொண்ணுறு ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்தார். அவருக்குப் பிறந்த குழந்தைகள் ஏழு ஆண்டுகள் ஏழு மாதங்களை அடைந்த போது குர்ஆனை மனனம் செய்தவரானார்.

முஹ்யித்தீன் மவ்லிதில் இடம் பெற்ற இந்த மூன்று வரிகளின் பொருள் இது. இதில் விபரீதமாகவோ, மார்க்கத்திற்கு முரணாகவோ ஏதும் இல்லையே என்று தோன்றலாம். இந்த வரிகளுக்கு விளக்கமான ஹிகாயத் எனும் பகுதியை வாசித்தால் இதில் உள்ள விபரீதங்கள் தெய வரும்.

**وروي انه قال رضي الله عنه لخادمه خضر اذهب الى الموصل وفي ظهرك ذرية اولهم ذكر اسمه محمد يعلمه القران رجل اعجمي اسمه علي بغدادي في سبعة اشهر ويستكمل حفظه وهو ابن سبع سنين بلا نظر وتعيش انت اربع وتسعين سنة وشهرا وسبعة ايام بلا خطر وتموت بارض بابل فكان جميع ذلك بلا تفاوت**

அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் தமது ஊழியர்களிடம் கூறியதாவது. நீ மூஸில் என்ற ஊருக்குச் செல்! உன் முதுகில் பல சந்ததிகள் உள்ளனர். அவர்களில் முதல் குழந்தை ஆண் குழந்தை. அக்குழந்தையின் பெயர் முஹம்மத். கண் தெரியாதவரும் பாக்தாத்தைச் சேர்ந்தவரும் அரபு மொழியைத் தாய்மொழியாகக் கொள்ளாதவருமான அலி என்பார் ஏழு மாதங்களில் அக்குழந்தைக்கு குர்ஆனைக் கற்றுக் கொடுப்பார். ஏழு வயதில் பாராமல் குர்ஆனை மனனம் செய்வார். நீ தொண்ணுற்று நான்கு வருடங்கள். ஒரு மாதம் ஏழு நாட்கள் சந்தேகமின்றி உயிர் வாழ்வாய். பாபிலோன் என்னும் ஊரில் நீ மரணிப்பாய். அப்துல் காதிர் ஜீலானி கூறியது ஒன்று கூட விடாமல் அப்படியே நடந்தேறியது.

* கிள்று என்பவருக்குப் பல குழந்தைகள் பிறக்கும் என்பதும்

* அவரது முதல் குழந்தை ஆண் குழந்தையாக இருக்கும் என்பதும்

* அக்குழந்தையின் பெயர் முஹம்மத் என்பதும்

* அக்குழந்தைக்கு குர்ஆனைக் கற்றுக் கொடுப்பவர் யார் என்பதும்

* எத்தனை வயதில் அக்குழந்தை குர்ஆனை கற்றுக் கொள்ளும்? எத்தனை வயதில் மனனம் செய்யும் என்பதும்

* கிள்று என்பார் இவ்வுலகில் வாழக்கூடிய நாட்கள் எவ்வளவு என்பதும்

* அவருக்கு மரணம் எப்போது? எங்கே? ஏற்படும் என்பதும்

அப்துல் காதிர் ஜீலானிக்கு முன்னமே தெரிந்திருந்ததாக இந்தக் கதை கூறுகின்றது.

இந்த மறைவான செய்திகளை அப்துல் காதிர் ஜீலானியால் அறிந்திருக்க இயலுமா? இஸ்லாமிய அடிப்படையில் இதற்கு ஆதாரம் ஏதும் உள்ளதா? நிச்சயமாக இல்லை. மாறாக இந்தக் கதையை மறுக்கக் கூடிய வகையில் ஏராளமான சான்றுகள் திருக்குர்ஆனிலும், நபிமொழியிலும் கிடைக்கின்றன.

மறைவான செய்திகளை அல்லாஹ்வைத் தவிர மற்றவர்கள் அறிய முடியும் என்றால் மனிதனை விட இறைவனுடன் மிக நெருக்கமாக உள்ள மலக்குகள், மனிதனை விட அதிக ஆற்றல் வழங்கப்பட்ட ஜின்கள், மனிதர்களில் சிறந்தவர்களான நபிமார்கள், அவர்களிலும் மிகச் சிறந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆகியோர் மறைவான செய்திகளை அறிந்திருக்க முடியும். இவர்களெல்லாம் மறைவானவற்றை அறிய மாட்டார்கள் என்று திருக்குர்ஆன் மிகத் தெளிவாக அறிவிக்கின்றது.

## மலக்குகளால் அறிய முடியாது

ஆதம் (அலை) அவர்களை இறைவன் படைக்க நாடிய போது மலக்குகள் அதில் தங்களின் அதிருப்தியைத் தெரிவித்தார்கள். இறைவன் ஆதம் (அலை) அவர்களின் அறிவுத் திறனை நிரூபித்த பின் மலக்குகள் பின்வருமாறு பதிலளித்தார்கள்.

அனைத்துப் பெயர்களையும் (இறைவன்) ஆதமுக்குக் கற்றுக் கொடுத்தான். பின்னர் அவற்றை வானவர்களுக்கு எடுத்துக் காட்டி நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இவற்றின் பெயர்களை என்னிடம் கூறுங்கள்! என்று கேட்டான். நீ தூயவன். நீ எங்களுக்குக் கற்றுத் தந்ததைத் தவிர எங்களுக்கு வேறு அறிவு இல்லை. நீயே அறிந்தவன்; ஞானமிக்கவன் என்று அவர்கள் கூறினர்.

(திருக்குர்ஆன் 2:31, 32)

மலக்குகளால் மறைவானவற்றை அறிய முடியவில்லை. அறிய முடியாது என்பதை இந்த வசனம் தெளிவாக அறிவிக்கின்றது.

## ஜின்களால் அறிய முடியாது

ஜின்கள் என்றொரு படைப்பு உள்ளதாக நம்புகிறோம். நம்ப வேண்டும். ஜின்கள் எனும் படைப்பினர் மனிதனைப் போலவே பகுத்தறிவு வழங்கப்பட்டவர்கள். அதனால் தான் ஜின்களும், மனிதர்களும் தன்னை வணங்க வேண்டும் என்று இறைவன் கட்டளையிடுகிறான்.

பகுத்தறிவில் ஜின்கள் மனிதர்களைப் போன்றவர்கள் என்றாலும் மனிதர்களைப் விடப் பன்மடங்கு ஆற்றல் வழங்கப்பட்டவர்கள் என்பதைத் திருக்குர்ஆனிலிருந்து நாம் அறிகிறோம். கண் இமைக்கும் நேரத்தில் அண்டை நாட்டு ராணியின் சிம்மாசத்தைக் கொண்டு வரும் அளவுக்கு ஜின்கள் ஆற்றல் பெற்றிருந்தனர். மேலும் சுலைமான் நபிக்கு மிகப் பெரும் காரியங்களை அவர்கள் செய்து கொடுத்தனர் என்பதையும் திருக்குர்ஆனிலிருந்து நாம் அறிந்து கொள்கிறோம்.

உங்கள் இடத்திலிருந்து நீங்கள் எழுவதற்கு முன்னால் அதை உங்களிடம் நான் கொண்டு வருகிறேன். நான் நம்பிக்கைக்குரியவன்; வலிமையுள்ளவன் என்று இப்ரீத் என்ற ஜின் கூறியது.

(திருக்குர்ஆன் 27:39)

அவர் விரும்பிய போர்க்கருவிகளையும், சிற்பங்களையும், தடாகங்களைப் போன்ற கொப்பரைகளையும், நகர்த்த முடியாத பாத்திரங்களையும், அவருக்காக அவை செய்தன. தாவூதின் குடும்பத்தாரே! நன்றியுடன் செயல்படுங்கள்! எனது அடியார்களில் நன்றியுடையோர் குறைவாகவே உள்ளனர் என்று கூறினோம்.

(திருக்குர்ஆன் 34:13

மனிதனை விட ஜின்களின் ஆற்றல் அதிகம் என்றாலும் மறைவானவற்றை அறிய முடியவில்லை என்பதை திருக்குர்ஆன் தெளிவுபடுத்துகிறது.

அவருக்கு நாம் மரணத்தை ஏற்படுத்திய போது பூமியில் ஊர்ந்து செல்லும் உயினம் (கரையான்) தான் அவரது மரணத்தைக் காட்டிக் கொடுத்தது. அது அவரது கைத்தடியைச் சாப்பிட்டது. அவர் கீழே விழுந்ததும் நமக்கு மறைவானவை தெரிந்திருந்தால் இழிவு தரும் இத்துன்பத்தில் இருந்திருக்க மாட்டோமே என்பதை ஜின்கள் விளங்கிக் கொண்டன.

(திருக்குர்ஆன் 34:14)

ஜின்களிடம் வேலை வாங்கிய சுலைமான் நபி கைத்தடியில் சாய்ந்த நிலையில் மரணித்து விடுகிறார்கள். சுலைமான் நபி உயிருடன் தங்களை கவனித்துக் கொண்டிருப்பதாக ஜின்கள் எண்ணி, தொடர்ந்து வேலை செய்து வந்தனர். கைத்தடியைக் கரையான்கள் அத்து, அதனால் சுலைமான் நபியின் உடல் கீழே விழும் வரை சுலைமான் நபி மரணித்ததை ஜின்கள் அறிய முடியவில்லை. தங்களுக்கு மறைவான செய்திகளை அறியும் திறன் கிடையாது என்பதையும் ஜின்கள் உணர்ந்து கொண்டனர் என்ற விபரங்களை இந்த வசனங்களிலிருந்து நாம் அறியலாம்.

மனிதனை விட அதிக ஆற்றல் பெற்ற ஜின்கள் தம் கண் முன்னே நடந்த அதே நேரம் வெளிப்படையாகத் தெரியாத ஒரு நிகழ்வை அறிய முடியவில்லை எனும் போது அப்துல் காதிர் ஜீலானிக்கு இத்தனை மறைவான விஷயங்கள் எப்படி தெரிந்திருக்க முடியும்?

## நபிமார்களால் அறிய முடியாது

நபிமார்கள் மறைவான விஷயங்களை அறிவார்களா? என்றால் இறைவனால் அறிவிக்கப்பட்டவைகளைத் தவிர மறைவான எந்த விஷயத்தையும் அறிய மாட்டார்கள் என்று திருக்குர்ஆன் தெளிவாக அறிவிக்கின்றது.

நபிமார்களில் அதிகமான வசதிகளும் ஆற்றலும் வழங்கப்பட்டவர் சுலைமான் (அலை). பறவைகளின் மொழிகள் அவர்களுக்குத் தெரிந்திருந்தன. ஜின்கள் அவர்களுக்குக் கட்டுப்பட்டிருந்தனர். உலகில் எவருக்குமே வழங்கப்படாத வல்லமை மிக்க ஆட்சி அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது. இத்தனை வல்லமைகள் வழங்கப்பட்டிருந்தும் மறைவான செய்திகளை அவர்களால் அறிய முடியவில்லை.

பறவைகளை அவர் ஆய்வு செய்தார். ஹுத்ஹுத் பறவையை நான் காணவில்லையே! அது ஓடி ஒளிந்து விட்டதா? என்றார். அதைக் கடுமையான முறையில் தண்டிப்பேன்; அல்லது அதை அறுத்து விடுவேன். அல்லது அது என்னிடம் தெளிவான சான்றைக் கொண்டு வர வேண்டும் (என்றும் கூறினார்). (அப்பறவை) சிறிது நேரமே தாமதித்தது. உமக்குத் தெரியாத ஒன்றைத் தெரிந்துள்ளேன். ஸபா எனும் ஊலிருந்து உறுதியான ஒரு செய்தியை உம்மிடம் கொண்டு வந்துள்ளேன் என்று கூறியது.

(அல்குர்ஆன் 27:20,21,22)

அப்பறவை எங்கே சென்றது என்பதும் சுலைமான் நபிக்குத் தெயவில்லை. அது கொண்டு வந்த செய்தியும் சுலைமான் நபிக்குத் தெரியவில்லை. நிகழ்காலத்தில் நடந்து கொண்டிருந்த ஒன்றை தம் கண்களுக்கு எட்டாத காரணத்தால் சுலைமான் நபி அறிய முடியவில்லை என்றால் வருங்காலத்தில் நடக்கவுள்ள ஏராளமான செய்திகளை அப்துல் காதிர் ஜீலானி எப்படி அறிந்திருக்க முடியும்?

ஈஸா (அலை) அவர்கள் ஏராளமான அற்புதங்கள் வழங்கப்பட்டவர். அற்புதமான முறையில் பிறந்து அற்புதமான முறையில் இன்று வரை உயிருடன் இப்பவர்.

உங்கள் வீட்டில் நீங்கள் சேமித்து வைத்தவற்றை நான் உங்களுக்குத் தெவிப்பேன் என்று அவர்கள் கூறியதிலிருந்து

(அல்குர்ஆன் 3.49)

சில மறைவான செய்திகள் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டிருந்தன என்பதை அறியலாம்.

இத்தகைய சிறப்புகள் வழங்கப்பட்ட ஈஸா (அலை) அவர்களை இறைவன் மறுமையில் விசாரிப்பான். உன் சமுதாயத்தினர் உன்னையும் உன் அன்னையையும் வணங்க வேண்டுமென நீர் தான் கூறினாரா? என்று வினவுவான். எனக்குள் உள்ளதை நீ அறிவாய்! உனக்குள் உள்ளதை நான் அறிய மாட்டேன். நீயே மறைவானவற்றை அறிபவன்  என்று அவர் பதிலளிப்பார்.

(அல்குர்ஆன் 5.116)

நாம் உயிருடன் இருந்தாலும் இந்த மக்கள் செய்தவை எனக்கு மறைவாக இருந்தன. அதனால் அதை நான் அறிய மாட்டேன். நீயே அறிவாய் என்று ஈஸா (அலை) அவர்கள் வாக்கு மூலம் தருகிறார்கள்.

அப்துல் காதிர் ஜீலானியோ பல ஆண்டுகளுக்குப் பின் நடக்கவுள்ளதை அறிந்து கொண்டதாக இந்தக் கதை கூறுகிறது. குர்ஆனை நம்பக்கூடிய முஸ்லிம் இந்தக் கதையை எவ்வாறு நம்ப இயலும்?

மறைவானவை யாருக்கேனும் தெரியும் என்றால் எல்லா வகையிலும் சிறந்து விளங்கிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவற்றை அறிந்திருக்க வேண்டும். அவர்கள் அறிந்திருந்தார்களா? என்றால் இல்லை என்று திருக்குர்ஆன் விடையளிக்கின்றது.

பல்வேறு நபிமார்களின் வாழ்வில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளை இறைவன் கூறிவிட்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறான்.

(முஹம்மதே!) இவை மறைவான செய்திகள். இவற்றை உமக்கு நாம் அறிவிக்கிறோம். இதற்கு முன் நீரும், உமது சமுதாயத்தினரும் இதை அறிந்திருக்கவில்லை. எனவே பொறுமையைக் கடைப்பிடிப்பீராக! (நம்மை) அஞ்சுவோர்க்கே (நல்ல) முடிவு உண்டு.

அல்குர்ஆன் 11:49

இது மறைவான செய்திகளில் ஒன்றாகும். (முஹம்மதே!) இதை நாமே உமக்கு அறிவிக்கிறோம். மர்யமை யார் பொறுப்பேற்றுக் கொள்வது என்று (முடிவு செய்ய) தமது எழுது கோல்களை அவர்கள் போட்ட போதும் அவர்களுடன் நீர் இருக்கவில்லை. அவர்கள் இது குறித்து சர்ச்சை செய்த போதும் அவர்களுடன் நீர் இருக்கவில்லை.

அல்குர்ஆன் 3:44

(முஹம்மதே!) இவை, மறைவான செய்திகள். இதை உமக்கு அறிவிக்கிறோம். அவர்கள் அனைவரும் (யூஸுஃபுக்கு எதிராக) ஒரு மனதாக சூழ்ச்சி செய்த போது அவர்களுடன் நீர் இருக்கவில்லை.

அல்குர்ஆன் 12:102

மறைவானவற்றை நபிகள் நாயகம் (ஸல் அவர்கள் அறியக் கூடுமோ என்று மக்கள் எண்ணிவிடக் கூடாது என்பதற்காக எனக்கு மறைவானவை தெரியாது என்று நபியவர்களைத் தெளிவாகவே இறைவன் கூறச் சொல்கிறான்.

அல்லாஹ்வின் கருவூலங்கள் என்னிடம் உள்ளன; மறைவானதை அறிவேன்; என்று உங்களிடம் கூற மாட்டேன். நான் வானவர் என்றும் உங்களிடம் கூற மாட்டேன். எனக்கு அறிவிக்கப்படுவதைத் தவிர (வேறெதனையும்) நான் பின்பற்றுவதில்லை என்று (முஹம்மதே!) கூறுவீராக! குருடனும், பார்வையுடையவனும் சமமாவார்களா? சிந்திக்க மாட்டீர்களா? என்று கேட்பீராக!

(அல்குர்ஆன் 6:50)

என்னிடம் அல்லாஹ்வின் கருவூலங்கள் உள்ளன என்று உங்களிடம் கூற மாட்டேன். மறைவானவற்றையும் அறிய மாட்டேன். நான் வானவர் என்றும் உங்களிடம் கூற

மாட்டேன். உங்கள் கண்கள் இழிவாகக் காண்போருக்கு அல்லாஹ் எந்த நன்மையும் அளிக்கவே மாட்டான் எனவும் கூற மாட்டேன். அவர்களின் உள்ளங்களில் உள்ளதை அல்லாஹ் மிக அறிபவன். (அவ்வாறு கூறினால்) நான் அநீதி இழைத்தவனாகி விடுவேன்  (எனவும் கூறினார்.)

(அல்குர்ஆன் 11:31)

அல்லாஹ் நாடினால் தவிர எனக்கே நன்மை செய்யவோ, தீமை செய்யவோ நான் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. நான் மறைவானதை அறிந்து கொள்பவனாக இருந்திருந்தால் நன்மைகளை அதிகம் அடைந்திருப்பேன். எந்தத் தீங்கும் எனக்கு ஏற்பட்டிருக்காது. நம்பிக்கை கொள்ளும் சமுதாயத்திற்கு நான் எச்சப்பவனாகவும், நற்செய்தி கூறுபவனாகவுமே இருக்கிறேன்  என்று (முஹம்மதே!) கூறுவீராக!

(அல்குர்ஆன் 7.188)

இவரது இறைவனிடமிருந்து இவருக்குச் சான்று அருளப்பட்டிருக்க வேண்டாமா?  என்று அவர்கள் கேட்கின்றனர். மறைவானவை அல்லாஹ்வுக்கே உயன. நீங்களும் எதிர்பாருங்கள்! நானும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்  என்று (முஹம்மதே!) கூறுவீராக!

(அல்குர்ஆன் 10:20)

வானங்களிலும், பூமியிலும் மறைவானதை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய மாட்டார்கள். தாங்கள் எப்போது உயிர்ப்பிக்கப்படுவோம் என்பதையும் அவர்கள் அறிய மாட்டார்கள்  என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 27:65)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையே இவ்வாறு அல்லாஹ் கூறச் செய்கின்றான் என்றால் மற்றவர்கள் மறைவானவற்றை அறிவார்கள் என்பதை எப்படி நம்ப முடியும்?

மனிதர்களே! நீங்கள் செருப்பணியாதவர்களாகவும், நிர்வாணமாகவும், விருத்த சேதனம் (சுன்னத்) செய்யப் படாதவர்களாகவும் அல்லாஹ்வின் முன்னால் ஒன்று திரட்டப்படுவீர்கள். முதலில் எவ்வாறு படைத்தோமோ அவ்வாறே மீண்டும்

உருவாக்குவோம்  என்று இதைத் தான் அல்லாஹ் கூறுகிறான். முதலில் இப்ராஹீம் நபியவர்களுக்கு ஆடை அணிவிக்கப்படும். அறிந்து கொள்க! எனது சமுதாயத்தில் சிலர் கொண்டு வரப்பட்டு இடப்பக்கமாக (நரகத்தின் பக்கமாக) இழுத்துச் செல்லப்படுவார்கள். அப்போது நான் என் இறைவா! அவர்கள் என் தோழர்கள் என்று கூறுவேன். உமக்குப் பின் அவர்கள் செய்ததை நீர் அறியமாட்டீர்  என்று என்னிடம் கூறப்படும். நான் அவர்களுடன் இருந்த போது அவர்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தேன். என்னை நீர் கைப்பற்றியதும் நீயே அவர்களின் கண்காணிப்பாளனாய் நீதான் இருந்தாய். நீதான் ஒவ்வொரு பொருளையும் பார்ப்பவன்  என்று நல்லடியார் (ஈஸா) கூறியது போல் நானும் கூறி விடுவேன். இவர்களை விட்டு நீர் பிந்தது முதல் வந்த வழியே திரும்பிச் சென்று கொண்டே இருந்தனர்  என்று என்னிடம் கூறப்படும், என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

புகாரி 3349, 3447, 4625, 4740, 6526

என் கணவருடன் முதலிரவு நடந்த பின் காலையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். நீ என்னருகில் எவ்வாறு அமர்ந்துள்ளாயோ அது போல் என் விரிப்பில் அமர்ந்தார்கள். அப்போது சிறுமிகள் தஃப் (சலங்கையில்லாத கொட்டு) அடித்துக் கொண்டு பத்ருப் போரில் கொல்லப்பட்ட தமது தந்தையைப் பற்றி பாடிக் கொண்டிருந்தனர். அப்போது ஒரு சிறுமி நாளை நடப்பதை அறியும் நபி நம்மிடம் இருக்கிறார்கள் என்று பாடினார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) இவ்வாறு கூறாதே! ஏற்கனவே கூறிக்கொண்டிருந்ததைக் கூறு  என்றார்கள்.

புகாரி 4001, 5147)

ஆயிஷா (ரலி) அவர்களின் மீது களங்களம் சுமத்தப்பட்டு உண்மை நிலை தெரியாமல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பல நாட்கள் மனைவியைப் பிந்திருந்து இறைவன் ஆயிஷா (ரலி) அவர்களின் துய்மையைப் பற்றி அறிவித்த பின்பே உண்மை நிலவரம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தெரிந்தது என்ற வரலாற்று உண்மையும்,

(புகாரி 2661)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கே மறைவானவை தெரியாது என்பதற்குத் தெளிவான சான்றுகள்.

இவ்வளவு சான்றுகளையும் தூர எறிந்துவிட்டு நபியவர்களுடன் ஒப்பிடும் போது ஒன்றுமற்றவரான அப்துல் காதிர் ஜீலானிக்கு மறைவான செய்திகள் தெரியும் என்று நம்பலாமா? அப்படி ஒருவர் நம்பினால் அவரிடம் கடுகளகாவது ஈமான் இருக்குமா? என்பதை மவ்லிது பக்தர்கள் சிந்திக்க வேண்டும்.

எவனோ முகவரியற்றவன் எழுதிய இந்தப் பாடல்களுக்காக மார்க்கத்தைப் பிழைப்புக்கு வழியாக்கிக் கொண்டவர்களின் பேச்சை நம்பினால் திருக்குர்ஆனையும் நபிகளாரின் போதனைகளையும் மறுத்த குற்றம் ஏற்படாதா? என்பதைச் சிந்தியுங்கள். குர்ஆனையும், நபியையும் மறுத்த பின் முஸ்லிமாக இருக்க முடியுமா? என்பதையும் சிந்தியுங்கள்.

யூதர்களின் சூழ்ச்சியால் உருவாக்கப்பட்ட இந்த மவ்லிதுக் குப்பையைத் தூக்கி எறிந்துவிட்டு அல்லாஹ்வின் வேதத்தின் பால் வாருங்கள்.

## 7 அவ்லியாக்களின் பிடரிகளை மிதித்தவர்

முஹ்யித்தின் மவ்லிதில் இடம் பெறும் மற்றொரு நச்சுக் கருத்து இது. இதன் பொருள் பின் வருமாறு.

اذ قال يوما مخبرا بالنعم *عن وارد من ربه ذي الكرم

على رقاب الاولياء قدمي * فسلموا لذاك كل السلم

قد قلت بالاذن من مولاك مؤتمرا *قدمي على رقبات الاولياء طرا

فكلهم قد رضوا وضعا لها بشرا

அருள் நிறைந்த தம் இறைவனின் அனுமதியுடன் தமக்கு வழங்கப்பட்ட அருட்கொடைகளை ஒரு நாள் (முஹ்யித்தீன்) கூறினார். அதில் என் பாதங்கள் அவ்லியாக்களின் பிடரிகள் மீது உள்ளன என்றார். அனைத்து அவ்லியாக்களும் இதைப் பூரணமாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.

இந்த நச்சுக்கருத்துக்கு விளக்கவுரையாக ஹிகாயத்தில் கூறப்படுவதையும் பார்த்துவிட்டு இதில் உள்ள தவறுகளை ஆராய்வோம்.

அப்துல் காதிர் ஜீலானி பிறப்பதற்கு சுமார் நூறு வருடங்களுக்கு முன் அப்துல் காதிர் ஜீலானி அல்லாஹ்வுடைய அவ்லியாக்கள் ஒவ்வொருவரின் கழுத்திலும் தமது பாதம் உள்ளது என்று கூறுமாறு கட்டளையிடப்படுவார் என்று ஒரு பெரியார் இல்ஹாமில் தெரிந்து கூறினார். அவர் கூறியது போலவே அப்துல் காதிர் ஜீலானி இவ்வுலகில் அதிகாரம் செலுத்திய காலத்தில் ஐம்பத்திரண்டு அவ்லியாக்கள் அடங்கிய அவையில் அப்துல் காதிர் ஜீலானி பிரகடனம் செய்தார். அங்கே இருந்த அவ்லியாக்கள் அவ்விடத்தில் இல்லாத அவ்லியாக்கள் அனைவரும் இதற்குக் கட்டுப்பட்டுத் தம் கழுத்துக்களைத் தாழ்த்தினார்கள். ஆனால் இஸ்பஹான் ஊரைச் சேர்ந்த ஒரே ஒருவர் மட்டும் மறுத்தார். இதனால் இவரது விலாயத் பறிக்கப்பட்டது.

ஏகத்துவக் கொள்கையைக் கால்களால் மிதித்துத் தள்ளக்கூடிய இந்தக் கதையில் உள்ள நச்சுக் கருத்துக்களைப் பார்ப்போம்.

ஒருவர் இறைநேசராக அவ்லியாக்களில் ஒருவராக எப்போது ஆக முடியும்? அல்லாஹ்வின் அனைத்துக் கட்டளைகளையும் பின்பற்றி நடந்து, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை முன் மாதிரியாகக் கொண்டு வாழ்வதன் மூலம் தான் ஒருவர் இறைநேசராக முடியும்.

ஆணவம், பெருமை, மக்களைத் துச்சமாக மதித்தல் போன்ற பண்புகள் ஷைத்தானின் பண்புகள் என்று திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்.

பூமியில் கர்வத்துடன் நடக்காதே! நீ பூமியைப் பிளந்து, மலைகளின் உயரத்தின் அளவை அடையவே மாட்டாய்! இவை அனைத்தின் கேடும் உமது இறைவனிடம் வெறுக்கப்பட்டதாகும்.

(அல்குர்ஆன் 17:37,38)

மனிதர்களை விட்டும் உனது முகத்தைத் திருப்பிக் கொள்ளாதே! பூமியில் கர்வமாக நடக்காதே! கர்வம் கொண்டு பெருமையடிக்கும் எவரையும் அல்லாஹ் விரும்ப மாட்டான்.

(அல்குர்ஆன் 31:18)

நரகத்தின் வாசல்கள் வழியாக நுழையுங்கள்! அதில் நிரந்தரமாகத் தங்குவீர்கள். (என்று கூறப்படும்) பெருமையடித்தோரின் தங்குமிடம் மிகவும் கெட்டது.

(அல்குர்ஆன் 16:29)

வானங்களிலும், பூமியிலும் பெருமை அவனுக்கே உரியது. அவன் மிகைத்தவன்; ஞானமிக்கவன்.

(அல்குர்ஆன் 45:37)

பூமியில் ஆணவத்தையும், குழப்பத்தையும் விரும்பாதவர்களுக்காக அந்த மறுமை வாழ்வை ஏற்படுத்தியுள்ளோம். நல்ல முடிவு (இறைவனை) அஞ்சுவோர்க்கே.

(அல்குர்ஆன் 28:83)

அவர்களில் பல்வேறு கூட்டத்தினர் அனுபவிப்பதற்காக நாம் வழங்கியுள்ளதை நோக்கி உமது கண்களை நீட்டாதீர்! அவர்களுக்காகக் கவலைப்படாதீர்! நம்பிக்கை கொண்டோரிடம் உமது சிறகைத் தாழ்த்துவீராக!

(அல்குர்ஆன் 15:88)

அளவற்ற அருளாளனின் அடியார்கள் பூமியில் பணிவாக நடப்பார்கள். அறிவீனர்கள் அவர்களுடன் உரையாடும் போது ஸலாம் எனக் கூறுவார்கள்.

(அல்குர்ஆன் 25:63)

பெருமையடிப்பதும் ஆணவம் கொள்வதும் இறைவனுக்குப் பிடிக்காது. இவை நரகத்திற்குக் கொண்டு செல்லும் என்பதை இவ்வசனங்கள் விளக்குகின்றன.

என் காலை இன்னொருவனின் தலையில் வைக்கிறேன் என்று கூறுவதை விட ஆணவம் வேறெதிலும் இருக்க முடியாது. சாதாரண மனிதனின் தலையில் வைப்பதே இந்த நிலை என்றால் இறைவனின் நேசர்கள் தலையில் காலை வைப்பேன் எனக் கூறுவது ஆணவத்தின் உச்சகட்டமல்லவா?

ஒருவர் தம் சகோதர முஸ்லிமை மட்டமாகக் கருதுவது அவர் தீயவர் என்பதற்குப் போதிய சான்றாகும் என்பது நபிமொழி.

அறிவிப்பபவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்:: முஸ்லிம்

நீங்கள் பணிவுடன் நடங்கள். ஒருவர் மற்றவரிடம் வரம்பு மீற வேண்டாம். ஒருவர் மற்றவரிடம் பெருமையடிக்க வேண்டாம் என்று அல்லாஹ் எனக்கு அறிவித்துள்ளான் என்பதும் நபிமொழி.

அறிவிப்பவர்: இயாள் பின் ஹிமார் (ரலி)

நூல்: முஸ்லிம் 4650,

யாருடைய உள்ளத்தில் கடுகளவு பெருமை உள்ளதோ அவர் சொர்க்கத்தில் நுழைய முடியாது என்பதும் நபிமொழி.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூது,

நூல்: முஸ்லிம் 131, 133

பெருமை எனது மேலாடை. கண்ணியம் எனது கீழாடை. இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றுக்கு யாராவது என்னிடம் போட்டியிட்டால் அவனை நரகில் நுழைப்பேன் என்று அல்லாஹ் கூறுவதாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: முஸ்லிம் 4752

இறைவனுக்கு மாத்திரமே சொந்தமான இந்தத் தன்மைக்குத் தான் அப்துல் காதிர் ஜீலானி போட்டியிடுவதாக இந்தக் கதை கூறுகிறது.

அல்லாஹ்வின் அனுமதியுடன் தானே இதை அவர் கூறியதாகக் கதையில் உள்ளது என்று சிலர் சமாளிக்கலாம். அல்லாஹ் எவற்றையெல்லாம் நாடினானோ அவை அனைத்தையும் தன்னுடைய வேதத்தின் மூலமும் தனது தூதரின் மூலமும் அனுமதித்து விட்டான். எவற்றையெல்லாம் தடை செய்ய நாடினானோ அவற்றையெல்லாம் தன் வேதத்தின் மூலமாகவும், தூதர் மூலமாகவும் தடுத்து விட்டான்.

திருக்குர்ஆனில் அவன் தடை செய்த ஆணவத்தை வேறு எவருக்காகவும் அனுமதிக்க மாட்டான். நபிகள் நாயகத்துக்கே இறைவன் தடை செய்தவைகளை அப்துல் காதிருக்கு அனுமதித்தான் என்பது இன்னொரு மார்க்கத்தை உருவாக்குவதாகும். அப்துல் காதிரை நபியாக ஆக்குவதாகும். இந்த உண்மை கூட இவர்களுக்குத் தெரியவில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது பாதம் எல்லா நபிமார்களின் தலை மேல் உள்ளது என்றோ நபித்தோழர்களின் கழுத்துக்களில் என் பாதம் உள்ளது என்றோ கூறவில்லை. தம் தோழர்களிடம் நல்ல நண்பராகவே அவர்கள் நடந்து கொண்டார்கள்.

இஸ்லாத்தின் உண்மை வடிவத்தைச் சிதைக்கும் எண்ணத்தில் தான் யூதர்களால் யூதக் கைக்கூலிகளால் இந்த மவ்லிதும் இந்தக் கதையும் புனையப்பட்டிருக்க வேண்டும்.

அல்லாஹ்வின் நிலைக்கு அப்துல் காதிரை உயர்த்தி நபியவர்களை விட அவர்களைச் சிறந்தவராகக் காட்டும் இந்தக் குப்பையைத் தான் பக்திப் பரவசத்துடன் மார்க்கம் அறியாத முஸ்லிம்கள் ஓதி வருகின்றனர்.

அப்துல் காதிர் ஜீலானி இப்படிச் சொன்னார் என்று நாம் நம்பவில்லை. இப்படி அவர் சொல்லியிருந்தால் அவரது காலத்திலோ, அவருக்கு அடுத்த காலத்திலோ எழுதப்பட்ட நூல்களில் இந்த விபரம் இடம் பெற்றிருக்க வேண்டும். அப்படி எந்த ஆதாரமும் இல்லை..

மார்க்க அறிவும் மார்க்கத்தில் பேணுதலும் உள்ள மக்கள் வாழ்ந்த காலத்தில் அப்துல் காதிர் இவ்வாறு கூறியிருந்தால் அவரை அன்றைய நன்மக்கள் விட்டு வைத்திருக்க மாட்டார்கள். மனிதனைக் கடவுளாக்கும் சித்தாந்தத்துக்கு இன்றைய முஸ்லிம்கள் பழக்கப்பட்டுப் போயிருக்கலாம். அன்றைய முஸ்லிம்கள் இதை ஜீரணித்திருக்க மாட்டார்கள்.

எல்லா அவ்லியாக்களும் அப்துல் காதிரின் கால்களில் மதி வாங்கத் தலையைக் கொடுத்தார்களாம். ஒருவர் மட்டும் மறுத்தாராம். இதனால் அவரது விலாயத் (வலிப்பட்டம்) பறிக்கப்பட்டது என்றும் மேற்கண்ட கதையில் கூறப்படுகிறது

வலிப்பட்டம் என்பது ஏதோ மதராஸாக்களில் வழங்கப்படும் ஸனது என்று நினைத்துக் கொண்டார்கள். யாரெல்லாம் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டு நடக்கிறார்களோ அவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் நேசர்கள் தாம். தனிப்பட்ட முறையில் யார் யார் இறைநேசர் என்பது மறுமையில் இறைவன் தீர்ப்பு வழங்கும் போது தான் தெரிய வரும்.

இறையச்சம் உள்ளத்தின்பால் பட்டதாகும். எவரது உள்ளத்தில் இறையச்சம் உள்ளது என்பதை இறைவன் மட்டுமே அறிவான். அப்துல் காதிர் அவர்களின் புறச் செயல்களைப் பார்த்து அவர்கள் நல்லடியாராக இருந்திருக்கலாம் என்று

நம்புகிறோம். அவரது நோக்கம் தவறாக இருந்தால் அது மறுமையில் தான் தெரியவரும்.

இறை நேசர்கள் என்று மக்களால் முடிவு செய்யப்பட்ட எத்தனையோ பேர் ஷைத்தானின் நேசர்கள் வரிசையில் நிற்பார்கள். இறைவனின் எதிரிகள் என்று மக்களால் முடிவு செய்யப்பட்ட எத்தனையோ பேர் இறை நேசர்கள் வரிசையில் நிற்பார்கள்.

உலகில் எத்தனை அவ்லியாக்கள் இருந்தார்கள். அவர்கள் யார்? என்ற பட்டியலே அப்துல் காதிரின் கையில் இருந்தது என்ற கருத்தையும் அந்தக் கதை கூறுகிறது. அப்துல் காதிரை அல்லாஹ்வாக்கும் சதித் திட்டத்தின் ஒரு பகுதியே மவ்லிது என்பதற்கு இந்தக் கதை ஒன்றே போதிய சான்றாகும்.

அப்துல் காதிருக்கு முன் அவ்லியாக்களே வாழவில்லையா? அப்படி வாழ்ந்திருந்த அவ்லியாக்களை மிதித்தது யார்? அவர்களையும் இவரே மிதித்ததாகச் சொன்னால் உத்தம ஸஹாபாக்களையும் கண்ணியத்திற்குரிய நான்கு இமாம்களையும் இவர் மிதித்தார் என்று சொல்கிறார்களா? இவர் காலத்திற்குப் பின் கியாம நாள் வரை அவ்லியாக்கள் வர மாட்டார்களா? வருவார்கள் என்றால் அவர்களை மிதிப்பவர் யார்? அவர்களையும் இவரே மிதிப்பார் என்றால் இவர் சாகாவரம் பெற்றவரா? அப்படியானால் சாகாவரம் பெற்றவருக்கு பாக்தாதில் கப்ரு ஏன்? இத்தனைக் கேள்விகளையும் சிந்தித்தால் முஹ்யித்தீன் மவ்லிது கூறும் இக்கதை பச்சைப் பொய்யாகும் என்பதில் யாருக்கும் சந்தேகம் வராது.

## சூம்பிய ஹம்மாதின் கை 8

**القاه حماد بيوم حصر *اذ ما مشى لجمعة فى نهر**

**فقال شلت كفه فى قبره *فقام يدعو الله مولى النعم**

**مع ما يؤمن خمسة من قبرا *فى الالف حتى صححت فابتدرا**

**اصحابه اذ اخبروا ذالخبرا *فطالبوا تحقيقه بالحشم**

**فاشهد المولى بذاكم يوسفا *وعبد رحمان به قد كشفا**

**فاستعفروا مما جنوه اسفا *وذاك فضل المصطفى ذى العلم**

ஜ?ம்ஆவுக்காக அப்துல் காதிர் நடந்து சென்ற போது அவரது ஆசியர் ஹம்மாத் அவரை நதியில் தள்ளினார். இதனால் மண்ணறையில் ஹம்மாதின் கை சூம்பிவிட்டது. இதைக் கண்ட அப்துல் காதிர் அல்லாஹ்விடம் துஆச் செய்தார்கள். கப்ரில் உள்ள ஐயாயிரம் பேர் இதற்கு ஆமீன் கூறினார்கள். இதை அப்துல் காதிர் மக்களிடம் கூறியவுடன் ஹம்மாதின் சீடர்கள், இதை நிரூபிக்க வேண்டும் என்று அப்துல் காதிரிடம் கேட்டனர். அல்லாஹ் யூசுஃபுக்கும், அப்துர் ரஹ்மானுக்கும் இந்தக் காட்சியைக் காட்டினான். தங்கள் தவறுக்காக ஹம்மாதின் சீடர்கள் பாவமன்னிப்புத் தேடினார்கள்.

இது முஹ்யித்தீன் மவ்லிதில் காணப்படும் இந்த வரிகளின் கருத்து. இந்த வரிகளுக்கு விளக்கவுரையாக மவ்லித் புத்தகத்தில் இடம் பெறும ஹிகாயத் என்னும் பகுதியையும் பார்த்துவிட்டு இந்தக் கதையில் வரும் அபத்தங்களை ஆராய்வோம்.

ஒரு நாள் நீண்ட நேரம் அப்துல் காதிர் வெயிலில் நின்றார். அவருக்குப் பின் ஏராளமான வணக்கசாலிகள் நின்றனர். நீண்ட நேரம் நின்றுவிட்டுப் பின்னர் சந்தோஷத்துடன் அவர் திரும்பியதைப் பற்றி அவரிடம் கேட்கப்பட்டது. அதற்கவர் ஒரு நாள் நான் ஹம்மாதுடன் ஜும்ஆத் தொழச் சென்றேன். நதியோரத்தை நாங்கள் அடைந்த போது என்னை அவர் நதியில் தள்ளினார். அப்போது நான் அல்லாஹ்வின் பெயரால் ஜும்ஆவின் குளிப்பை நிறைவேற்றுகிறேன் என்றேன். நதியிலிருந்து வெளியேறி அவர்களைத் தொடர்ந்தேன். அவரது சீடர்கள் என்னைப் பழித்தனர். அவர் அதைத் தடுத்தார். இன்று கப்ரில் ஆபரணங்களால் அலங்காரம்

செய்யப்பட்டவராக அவரை நான் கண்டேன். எனினும் அவரது வலது கை சூம்பியிருந்தது. ஏன் இப்படி என்று நான் கேட்டேன். அதற்கவர் இந்தக் கையால் தான் உம்மைத் தள்ளினேன். இதை நீர் மன்னிக்கக் கூடாதா? இதை நல்லபடியாக மாற்றுமாறு அல்லாஹ்விடம் துஆச் செய்யக் கூடாதா? என்று கேட்டார். நான் அல்லாஹ்விடம் கேட்டேன். ஐந்தாயிரம் வலிமார்கள் தங்கள் கப்ருகளிலிருந்து எழுந்து ஆமீன் கூறினார்கள். உடனடியாக அல்லாஹ் அந்தக் கையை நல்லபடியாக மாற்றி விட்டான். அந்தக் கையால் அவர் என்னிடம் முஸாபஹாச் செய்தார் எனக் கூறினார். இந்தச் செய்தி பரவியதும் ஹம்மாதின் சீடர்கள் இதை நிரூபிக்குமாறு வற்புறுத்தத் திரண்டனர். பெரும் கூட்டமாக அவரிடம் வந்தனர். அவர்களில் எவருக்குமே பேச இயலவில்லை. அவர்கள் வந்த நோக்கத்தை அப்துல் காதிரே கூறலானார். சிறந்த இருவரைத் தேர்வு செய்யுங்கள். அவர்கள் வாயிலாக இந்த உண்மை நிரூபணமாகும் என்றும் கூறினார். அவர்கள் யூசுஃப், அப்துர் ரஹ்மான் ஆகிய இரு பெரியார்களைத் தேர்வு செய்தனர். இதை ஒரு வாரத்தில் நீங்கள் நிரூபிக்க வேண்டும் என்று அப்துல் காதிரிடம் கூறினார்கள். அதற்கு அவர் நீங்கள் இவ்விடத்தை விட்டு எழுவதற்கு முன் இது நிரூபணமாகும் என்றார். சற்று நேரம் சென்றதும் யூசுஃப் எனும் பெரியார் ஓடோடி வந்தார். ஹம்மாதை அல்லாஹ் எனக்குத் தெளிவாகக் காட்டினான். யூசுஃபே நீ அப்துல் காதரின் மதரஸாவுக்கு உடனே செல். அங்குள்ளவர்களிடம் கூறு என்று ஹம்மாத் என்னிடம் கூறினார் என்றார். பிறகு அப்துர் ரஹ்மான் கைசேதப்பட்டவராக வந்து யூசுஃப் கூறியது போலவே கூறினார். அனைவரும் பாவமன்னிப்புக் கேட்டனர்.

இந்தக் கதையில் உள்ள அபத்தங்களை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

அபத்தம் 1

ஜும்ஆ தினத்தில் குளிப்பது வலியுறுத்தப்பட்ட ஒரு சுன்னத். இறை நேசர்கள் இது போன்ற சுன்னத்துக்களை விட்டுவிட மாட்டார்கள். ஆனால் அப்துல் காதிர் குளிக்காமலே ஜும்ஆவுக்குச் சென்றிருக்கிறார். ஹம்மாத் அவரைப் பிடித்துத் தள்ளிய போது தான் ஜும்ஆவின் குளிப்பை நிறைவேற்றுவதாகக் கூறியுள்ளார். பிடித்துத் தள்ளாவிட்டால் குளிக்காமலே சென்றிருப்பார். இதிலிருந்து அப்துல் காதிர் சுன்னத்தைப் பேணாதவர் என்று தெரிகின்றது.

ஒரு வணக்கத்தைச் செய்ய வேண்டுமானால் ஈடுபாட்டுடனும், விருப்பத்துடனும் செய்ய வேண்டும். வலுக்கட்டாயமாகத் தள்ளப்பட்டு செய்தால் அது வணக்கத்தை நிறைவேற்றியதாக ஆகாது. இந்த அடிப்படை விஷயம் கூட அப்துல் காதிருக்குத் தெரியவில்லை என்று இந்தக் கதை கூறுகின்றது.

அபத்தம் 2

கப்ரில் அடக்கம் செய்யப்பட்டவரை அப்துல் காதிர் சந்தித்து உரையாடியதாக இந்தக் கதை கூறுகின்றது. இந்தச் சந்திப்பு கனவு போன்ற நிலையில் நடக்கவில்லை. மாறாக நேருக்கு நேர் இந்தச் சந்திப்பு நிகழ்ந்துள்ளது. அப்துல் காதிரும் ஹம்மாதும் ஒருவரை மற்றவர் முஸாபஹா செய்தார்கள் என்றும் இந்தக் கதை கூறுகின்றது. உயிருடன் இவ்வுலகில் இருப்பவர் இறந்தவருடன் நேருக்கு நேராகச் சந்திப்பது நடக்க முடியாதது என்று இஸ்லாம் கூறுகின்றது.

உயிர்களை அவை மரணிக்கும் நேரத்திலும், மரணிக்காதவற்றை அவற்றின் உறக்கத்திலும் அல்லாஹ் கைப்பற்றுகிறான். எதற்கு மரணத்தை விதித்து விட்டானோ அதைத் தனது கைவசத்தில் வைத்துக் கொண்டு மற்றதை குறிப்பிட்ட காலம் வரை விட்டு விடுகிறான். சிந்திக்கின்ற மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.

(அல்குர்ஆன் 39.45)

முடிவில் அவர்களில் யாருக்கேனும் மரணம் வரும் போது என் இறைவா! நான் விட்டு வந்ததில் நல்லறம் செய்வதற்காக என்னைத் திருப்பி அனுப்புங்கள்! என்று கூறுவான். அவ்வாறில்லை! இது (வாய்) வார்த்தை தான். அவன் அதைக் கூறுகிறான். அவர்கள் உயிர்ப்பிக்கப்படும் நாள் வரை அவர்களுக்குப் பின்னால் திரை உள்ளது.

(அல்குர்ஆன் 23.99, 100)

இறந்தவர்களுக்கும் இவ்வுலகில் வாழ்வோருக்குமிடையே எவ்விதத் தொடர்பும் கிடையாது என்பதை இவ்வசனங்கள் அறிவித்துள்ளன. கப்ரில் உள்ளவரை அப்துல் காதிர் ஜீலானி நேருக்கு நேராகச் சந்தித்ததும், அவருடன்

உரையாடியதும், முஸாபஹா செய்ததும் பச்சைப் பொய் என்பதை இவ்வசனங்கள் தெளிவுபடுத்துகின்றன.

இந்தக் கதையில் ஹம்மாத் என்பவரின் கை சூம்பியிருந்ததைத் தவிர மற்றபடி அவர் நல்ல நிலையில் உயர்ந்த அந்தஸ்துடன் இருந்ததாகக் கூறப்படுகின்றது. நல்ல மனிதர்கள் கப்ரில் எந்த நிலையில் இருப்பார்கள் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளனர். அந்த விளக்கத்துக்கு மாற்றமாக இந்தக் கதை அமைந்திருக்கின்றது.

பின்னர் நல்லடியாரின் மண்ணறை விரிவுபடுத்தப்படும். ஒளிமயமாக்கப்படும். பின்பு அவரை நோக்கி உறங்குவீராக எனக் கூறப்படும். நான் எனது குடும்பத்தினரிடம் சென்று இந்த விபரங்களைக் கூறிவிட்டுத் திரும்பி வருகிறேன் என்று அம்மனிதர் கூறுவார். அதற்கு அவ்வானவர்கள் நெருக்கமானவரைத் தவிர வேறு எவரும் எழுப்ப முடியாதவாறு புது மணமகன் உறங்குவது போல் நீர் உறங்குவீராக! இந்த இடத்திலிருந்து உம்மை இறைவன் எழுப்பும் வரை உறங்குவீராக என்று கூறுவார்கள். இது நபியவர்கள் தந்த விளக்கம்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : திர்மிதி

நல்லடியார்கள் உறக்க நிலையில் உள்ளனர். யாராலும் அவர்களை எழுப்ப முடியாது. மறுமை நாளில் இறைவனால் அவர்கள் எழுப்பப்படும் வரையிலும் அவர்கள் உறங்கிக் கொண்டே இருப்பார்கள் என்பதை இந்த ஹதீஸ்கள் அறிவிக்கின்றன. அப்துல் காதிர், ஹம்மாத் என்பவரை நேருக்கு நேர் சந்தித்தாகக் கூறுவது பொய் என்பதற்கு இந்த ஹதீஸ் சான்றாகும்.

அபத்தம் 3

ஐயாயிரம் அவ்லியாக்கள் அப்துல் காதிரின் துஆவுக்கு ஆமீன் கூறியதாகவும் இந்தக் கதை கூறுகின்றது. அவ்லியாக்கள் உறக்கத்தில் இருப்பார்கள் என்ற மேற்கண்ட ஹதீஸுக்கு இது முரணாக உள்ளது.

இறந்தோரைச் செவியுறச் செய்ய உம்மால் முடியாது! செவிடர்கள் பின்வாங்கி ஓடினால் அழைப்பை அவர்களுக்குச் செவியேற்கச் செய்ய உம்மால் முடியாது.

(அல்குர்ஆன் 30:52)

உயிருடன் உள்ளோரும், இறந்தோரும் சமமாக மாட்டார்கள். தான் நாடியோரை அல்லாஹ் செவியேற்கச் செய்கிறான். மண்ணறைகளில் உள்ளவர்களை நீர் செவியேற்கச் செய்பவராக இல்லை.

(அல்குர்ஆன் 35:22)

இறந்தவரைக் கேட்கச் செய்ய நபியாலும் முடியாது என்ற குர்ஆனின் மேற்கண்ட வசனங்களுக்கு முரணாக உள்ளது.

அபத்தம் 4

இந்தச் செய்தியை நம்ப மறுத்த ஹம்மாதின் சீடர்களுக்கு அப்துல் காதிர் இதை நிரூபித்த விதமும் ஏற்கத்தக்கதாக இல்லை.

இந்த இடத்தை விட்டு நீங்கள் எழுவதற்கு முன் நிரூபிக்கிறேன் என்று கூறியது மறைவான ஞானம் அவருக்கு உள்ளது என்று கூறுகின்றது. மறைவான ஞானம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது என்பதை முன்னர் நாம் நிரூபித்தோம்.

ஹம்மாத் என்பவர் யூசுஃபுக்கும் அப்துர் ரஹ்மானுக்கும் காட்சி தந்ததாகக் கூறுவதும் முன்னர் நாம் எடுத்துக் காட்டிய சான்றுகளுக்கு முரணாக உள்ளது.

இவை அனைத்துக்கும் மேலாக ஒரு விஷயத்தை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். அப்துல் காதிர் இவ்வாறு கூறியிருந்தால் அவரது காலத்தில் எழுதப்பட்ட நூல்களில் இது பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டும்.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களைக் கடவுள் நிலைக்கு உயர்த்தும் வகையில் இட்டுக்கட்டப்பட்ட கதைகளின் தொகுப்பே முஹ்யித்தீன் மவ்லிது. இது போல் புனையப்பட்ட மற்றொரு கதையைப் பார்ப்போம்.

## 9 பருந்தின் தலையைத் துண்டித்து உயிர்ப்பித்தவர்

**وقال اذما شوشت للفقرا *حديئة تصيح صوتا نكرا**

**يل ريح اخذا راسها فانكسرا *من بعد احياها ببدء الكلم**

அப்துல் காதிர் ஜீலானியுடனிருந்த ஃபக்கீர்களுக்கு இடையூறு ஏற்படுத்தும் வகையில் ஒரு பருந்துக் குஞ்சு கூச்சல் போட்டுக் கொண்டிருந்தது. அப்போது அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் காற்றே இதன் தலையைப் பிடி எனக் கட்டளையிட்டார்கள். உடனே அதன் தலை துண்டானது. பின்னர் இறை நாமம் கூறி அதை உயிர்ப்பித்தார்கள்.

இந்த வரிகளுக்கு விளக்கமாக அமைந்த ஹிகாயத் எனும் பகுதியையும் அறிந்து விட்டு இதில் உள்ள அபத்தங்களை அலசுவோம்.

அப்துல் காதிர் ஜீலானியின் அவையில் குழுமியிருந்த மக்களுக்கு இடையூறு ஏற்படுத்தும் வகையில் ஒரு பருந்து சப்தமிட்டுக் கடந்து சென்றது. அப்போது அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் காற்றே இதன் தலையைப் பிடி என்றார்கள். உடனே அதன் தலை ஒரு திசையிலும் உடல் மறு திசையிலும் விழுந்தன. உடனே அவர்கள் தமது ஆசனத்திலிருந்து இறங்கி பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று கூறினார்கள். உடனே அது உயிர் பெற்றுப் பறந்து சென்றது. மக்கிய எலும்புகளை உயிர்ப்பிக்கும் இறைவனின் அனுமதியுடன் மக்கள் முன்னிலையில் இது நடந்தேறியது.

இந்தக் கதையில் எத்தனை அபத்தங்கள் என்று பார்ப்போம்.

பருந்துகள் மக்களுடன் அண்டி வாழும் உயிரினம் அல்ல. மக்களை விட்டும் விலகியிருந்து கூச்சல் எதுவும் போடாமலே தம் ஹிகாயத்தைப் பருந்துகள் சாதித்துக் கொள்ளும். மக்களெல்லாம் குழுமியிருக்கும் இடத்திற்கு வந்து பருந்து கூச்சல் போட்டுக் கொண்டிருந்தது என்று கூறப்படுவதே இது பொய் என்பதற்குப் போதுமான சான்றாக உள்ளது.

இது உண்மை என்று வைத்துக் கொண்டால் கூட இன்னும் பல அபத்தங்கள் இதில் உள்ளன.

மனிதர்கள் தொழும் போது, உபதேசம் செய்யும் போது உயினங்கள் இடையூறு செய்வதில் ஆச்சரியம் இல்லை. நல்லது கெட்டதை வித்தியாசப்படுத்தி அறிந்து கொள்ளும் ஆற்றல் அவற்றுக்கு வழங்கப்படவில்லை. அவற்றின் சப்தம் நமக்குக் கூச்சலாகத் தோன்றினாலும் உண்மையில் அவை கூச்சல் போடவில்லை. தமக்கிடையே அவை பேசிக் கொள்வது தான் நமக்குக் கூச்சலாகத் தோன்றுகிறது.

தாவூதுக்கு ஸுலைமான் வாரிசானார். மக்களே! பறவையின் மொழி எங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ளது. அனைத்துப் பொருட்களும் எங்களுக்குத் தரப்பட்டுள்ளது. இதுவே தெளிவான அருட் கொடையாகும்  என்று அவர் கூறினார்.

(அல்குர்ஆன் 27.16)

பறவையின் மொழிகள் சுலைமான் நபிக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டதாகக் குர்ஆன் கூறுவதிலிருந்து இதை விளங்கலாம். சிந்தனையாளர்களும், மார்க்க அறிவுடையோரும் பறவைகளின் சப்தத்திற்காக ஆத்திரம் கொள்ள மாட்டார்கள். அவற்றின் கூச்சல் சகிக்க முடியாத அளவுக்கு அதிகமானால் கூட தலையைத் துண்டாக்கும் அளவுக்குப் போக மாட்டார்கள். விரட்ட வேண்டிய வகையில் விரட்டினால் அவை ஓடி விடும்.

இந்தக் கதை உண்மை என்று வைத்துக் கொண்டால் இது அப்துல் காதிர் ஜீலானி அவர்களுக்குப் பெருமை சேர்ப்பதாக இல்லை. உண்பதற்காகவும் நம்மைத் தாக்க வரும் போதும் தற்காத்துக் கொள்வதற்காகவும் சில உயிரினங்களைக் கொல்ல இஸ்லாம் அனுமதிக்கிறது. அதற்காகவே பருந்தை அவர்கள் கொன்றார்கள் என்றும் கருத முடியாது. அதற்காகக் கொன்றிருந்தால் அடுத்த வினாடியே அதை உயிர்ப்பித்திருக்க வேண்டியதில்லை. பாம்பைக் கண்டால் அதை நாம் கொல்லலாம். கொல்ல வேண்டும். இதற்கு நன்மையும் உண்டு. கொன்ற பாம்பை உடனே உயிர்ப்பித்தால் அதைக் கொல்ல வேண்டும் என்று மார்க்கம் கூறுவதற்காகக் கொல்லவில்லை. தம்முடைய வல்லமையைக் காட்டவே கொன்றிருக்கிறார் என்பது தான் பொருள்.

அடுத்து அந்த பருந்தைக் கொல்வதற்காக அவர் தேர்ந்தெடுத்த முறையும் ஏற்கும் படியாக இல்லை. எல்லா உயினங்களையும் மனிதர்களுக்காக இறைவன் வசப்படுத்திக் கொடுத்திருக்கிறான். மனிதனின் விருப்பப்படி நடப்பவற்றில் காற்றை இறைவன் கூறவில்லை. 7.57, 25.48, 30.46, 30.48, 35.09 ஆகிய வசனங்களில் காற்று இறைவனின் கட்டளைப்படி மட்டும் இயங்கக்கூடியது என்று இறைவன் கூறுகிறான். இந்தப் பொதுவான விதியிலிருந்து சுலைமான் நபி விஷயத்தில் மட்டும் இறைவன் விலக்களித்ததாகக் கூறுகிறான். 21.81, 34.12, 38.36 வசனங்களில் சுலைமானுக்கு காற்றை நாம் வசப்படுத்திக் கொடுத்தோம் என்று இறைவன் கூறுகிறான். இதிலிருந்து மற்ற எவருக்கும் காற்று கட்டுப்பட்டு நடக்காது என்பதை அறியலாம்.

இந்தக் கதையில் காற்று அப்துல் காதிர் ஜீலானியின் கட்டளைக்குக் காத்திருந்ததாகக் கூறப்படுகிறது. இவர் நினைத்ததை முடித்து விடுவார் என்று பயமுறுத்துவதற்காகவே இவ்வாறு கற்பனை செய்யப்பட்டுள்ளது என்பது இதிலிருந்து தெளிவாகும். காற்றின் அதிபதி அப்துல் காதிர் ஜிலானி தான் என்று நம்ப வைப்பதே இதன் நோக்கம் என்பதும் தெளிவாகிறது.

நபிமார்களுக்கு இறைவன் சில அற்புதங்களை வழங்கியதை நாம் அறிவோம். தமது தூதுத்துவத்தை மக்கள் நம்பி இஸ்லாத்தை ஏற்பதற்காகவும் இக்கட்டான நிலையிலிருந்து தப்புவதற்காகவும் தம் சமுதாயத்தவர் பயன் பெறுவதற்காகவும் இத்தகைய அற்புதங்களைச் சில சமயங்களில் இறைவன் அவர்கள் மூலம் நிகழ்த்திக் காட்டியுள்ளான்.

இங்கே அப்படிப்பட்ட உயர்ந்த நோக்கம் ஏதுமில்லை. யாரையும் இஸ்லாத்தில் இணைப்பதும் நோக்கமில்லை. ஏனெனில் இது அவரது சீடர்கள் மட்டும் குழுமியிருந்த போது நடந்திருக்கிறது. பருந்தின் தொல்லையிலிருந்து தம் சீடர்களைக் காப்பதும் கூட நோக்கம் அன்று. அது தான் நோக்கம் என்றால் உடனே அதை உயிர்ப்பித்திருக்க மாட்டார்.

அவர் இறைவனின் தூதராகவும் இருக்கவில்லை. இதன் மூலம் தாம் ஒரு இறைத்தூதர் என்பதைக் காட்டினார் என்றும் கூற முடியாது. அல்லாஹ் எப்படி

அழிப்பானே அதே போல் அப்துல் காதிராலும் அழிக்க முடியும். அவன் எப்படி இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறானோ அவ்வாறு அவராலும் உயிர்ப்பிக்க முடியும் என்று மக்களை நம்பச் செய்து அவரைத் தெய்வமாக்குவதே இந்தக் கதையின் நோக்கம்.

நபியவர்கள் இது போல் இடையூறு செய்த உயினங்களைக் காற்றுக்குக் கட்டளையிட்டு அழித்ததுமில்லை. உடனேயே உயிர்ப்பித்ததும் இல்லை. அப்துல் காதிர் நபியவர்களை விட அதிக ஆற்றல் பெற்றவர். இறைவனுக்கு நிகரானவர் என்பதைத் தான் இந்தக் கதை கூறுகிறது. அபத்தங்கள் நிறைந்த இந்தக் கதையைத் தான் மவ்லிது என்று அப்பாவி முஸ்லிம்கள் பக்தியுடன் பாடி வருகின்றனர். இதற்கு இறைவனிடம் நன்மை கிடைக்குமா? தண்டனை கிடைக்குமா? என்று மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும்.

## 10 கொள்ளையர்கள் மீது மிதியடிகளை வீசித் தாக்கியவர்

رمى بقبقابيه من قد نهبا *حتى ينال المال من قد سلبا

منهم فادوا ما عليهم وجبا *بالنذر معهما بايدى الخدم

முஹ்யித்தின் மவ்லிதில் காணப்படும் நச்சுக் கருத்து இது. இதன் பொருள் வருமாறு.

கொள்ளையடித்த பொருட்களை உரியவர்களிடம் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்பதற்காகக் கொள்ளையர்கள் மீது மரக்கட்டையலான தமது இரு மிதியடிகளை அப்துல் காதிர் ஜிலானி வீசினார்கள். அந்த மக்கள் அந்த மிதியடிகளுடன் நேர்ச்சை செய்த காணிக்கைகளையும் கொண்டு வந்து பணிவுடன் அப்துல் காதிர் ஜிலானியிடம் சமர்ப்பித்தார்கள்.

இந்த நச்சுக் கருத்துக்கு விளக்கவுரையாக ஹிகாயத் எனும் பகுதியில் கூறப்படுவதையும் பார்த்துவிட்டு இதிலுள்ள அபத்தங்களை ஆராய்வோம்.

நாங்கள் அப்துல் காதிர் ஜீலானியிடம் இருந்தோம். அவர்கள் மிதியடியணிந்து உளுச் செய்து இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். திடீரென்று இரு தடவை சப்தமிட்டுத் தமது இரு மிதியடிகளையும் வீசினார்கள். பிறகு மௌனமானார்கள். அவர்களிடம் (காரணம்) கேட்க மக்களுக்குத் துணிவில்லை. பின்னர் அரபியரல்லாத ஒரு கூட்டத்தினர் அப்துல் காதிர் ஜீலானிக்காக நேர்ச்சை செய்த தங்கம் மற்றும் ஆடைகளுடன் வந்தனர். அவர்களிடம் அந்த மிதியடியும் இருந்தது. அவர்களிடம் இந்த மிதியடி உங்களுக்கு எப்படிக் கிடைத்து? என்று நாங்கள் கேட்டோம். அதற்கவர்கள் நாங்கள் பயணம் செய்து கொண்டிருந்த போது கிராமப்புறத்திலுள்ள கொள்ளையர்கள் தங்களின் இரு தலைவர்களுடன் வந்து எங்களைத் தாக்கினார்கள். எங்களில் பலரைக் கொன்று விட்டு எங்களிடமிருந்த பொருட்களையும் கொள்ளையடித்தனர். அப்துல் காதிர் ஜீலானிக்காக நாம் நேர்ச்சை செய்யலாமே என்று இரண்டு வார்த்தைகளைத் தான் நாங்கள் கூறினோம். சொல்லி முடிப்பதற்குள் கடுமையான இரண்டு சப்தங்களைக் கேட்டோம். அவர்களில் ஒருவன் இங்கே வாருங்கள். நம் மீது இறங்கிய வேதனையைப் பாருங்கள் என்றான் நாங்கள் பார்த்த போது

அவர்களின் இரு தலைவர்களும் பிணமாகக் கிடந்தனர். ஒவ்வொருவருக்கு அருகிலும் ஒரு மிதியடி கிடந்தது. என்று விளக்கினார்கள். இதை அப்துல் ஹக் என்பார் கூறுகிறார்.

இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையைக் கடுகளவு அறிந்தவன் கூட ஜீரணிக்க முடியாத இஸ்லாத்தின் அடிப்படையையே தகர்க்கக்கூடிய இந்தக் கதையைத் தான் மவ்லிது என்ற பெயரால் பக்தியுடன் முஸ்லிம்கள் என்று தங்களைக் கூறிக் கொள்வோர் ஓதி வருகின்றனர்.

(நீங்கள் இணை கற்பித்தவை சிறந்தவையா? அல்லது) நெருக்கடியைச் சந்திப்பவன் பிரார்த்திக்கும் போது அதற்குப் பதிலளித்து துன்பத்தைப் போக்கி உங்களைப் பூமியில் வழித் தோன்றல்களாக ஆக்கியவனா? அல்லாஹ்வுடன் வேறு கடவுளா? குறைவாகவே சிந்திக்கிறீர்கள்.

(அல்குர்ஆன் 27.62)

நெருக்கடியான நேரத்தில் உதவி செய்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமுண்டா என்று இறைவன் கேட்கிறான். இதோ நானிருக்கிறேன் என அப்துல் காதிர் ஜீலானி கூறியதாக இந்தக் கதை கூறுகிறது.

அவர்கள் நேர்ச்சையை நிறைவேற்றுவார்கள். தீமை பரவிய நாளைப் பற்றி அஞ்சுவார்கள்

(அல்குர்ஆன் 76.7)

அல்லாஹ்வுக்கு வழிபடும் வகையில் யாரேனும் நேர்ச்சை செய்தால் அதை நிறைவேற்றட்டும். அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் விதமாக நேர்ச்சை செய்தால் அதை நிறைவேற்றக் கூடாது என்பது நபிமொழி.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி),

நூல்: புகாரி 6700, 6696

அல்லாஹ்வுக்கு மட்டுமே நேர்ச்சை செய்ய வேண்டும் என்பதை மேற்கண்ட வசனம் கூறுகிறது. இறைவன் தனக்காக எவற்றைச் செய்ய வேண்டும் என்று

கூறுகிறானோ அவை அனைத்தும் வணக்கங்களாகும். வணக்கங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் செய்யக் கூடாது. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்ற அடிப்படைக் கொள்கைக்கு இது முரணானதாகும்.

இந்த வசனமும் இந்த நபிமொழியும் இஸ்லாத்தின் அடிப்படையும் அந்தக் கூட்டத்தினருக்கும் தெரியவில்லை. அப்துல் காதிருக்கும் தெரியவில்லை. ஈமானை இழந்த அந்த மக்களைக் கண்டித்துத் திருத்த வேண்டிய அப்துல் காதிர் அதை அங்கிகரிக்கிறார். தமக்கு இறைத் தன்மை இருப்பது போல் நடந்திருக்கிறார் என்று இந்தக் கதை கூறுகிறது.

காலமெல்லாம் ஏகத்துவக் கொள்கையைப் பிரச்சாரம் செய்த அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் நிச்சயம் இப்படி நடந்திருக்க மாட்டார்கள். அவர்கள் பெயரால் வயிறு வளர்க்க எண்ணியவர்களால் இட்டுக் கட்டப்பட்டதே இந்தக் கதை.

அப்துல் காதிர் ஜீலானியைப் புகழ்கிறோம் என்று நினைத்துக் கொண்டு நானே கடவுள் என்று வாதிட்ட பிர்அவ்னைப் போல் அப்துல் காதிரை இந்தக் கதை மூலம் சித்தரிக்கின்றனர்.

நபித்தோழர்கள் எத்தனையோ துன்பங்களுக்கு ஆளானார்கள். அவர்களில் யாரும் நபியவர்களுக்காக நேர்ச்சை செய்ததில்லை. தந்திரமாகப் பல நபித்தோழர்களை அழைத்துச் சென்று எதிரிகள் வெட்டிக் கொன்றனர். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மிதியடிகளை எறிந்து அவர்களைக் கொல்லவில்லை.

நபியவர்களையே எத்தனையோ சந்தர்ப்பங்களில் அடித்தனர், உதைத்தனர், இரத்தம் சிந்தச் செய்தனர். அப்போதெல்லாம் மிதியடியை ஏவிவிட்டு அந்தத் துன்பத்திலிருந்து அவர்கள் தம்மைக் காத்துக் கொண்டதில்லை. இந்தத் துன்பங்களைச் சகித்துக் கொண்டார்கள். அல்லது அல்லாஹ்விடம் முறையிட்டார்கள். ஆனால் அப்துல் காதிரோ எல்லா அதிகாரமும் தம் கையில் உள்ளது போல் நடந்திருக்கிறார் என்பதை நம்ப முடிகிறதா? சிந்தியுங்கள்.

அப்துல் காதிர் ஜீலானியை இன்று ஏராளமான முஸ்லிம்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள். ஆனால் அவர் வாழ்ந்த காலத்தில் அகிலமெல்லாம் அவரை அறிந்து வைத்திருக்கவில்லை. அவரது ஊராரும் அவரைச் சுற்றியிருந்தவர்களும் மட்டுமே அவரை அறிந்திருந்தார்கள். அவரும் அவரது புகழும் அரபுப் பிரதேசத்தைத் தாண்டியதில்லை. உலகமெங்கும் ஒருவரது புகழ் பரவும் அளவுக்கு எந்த நவீன பிரச்சார சாதனங்களும் அன்று இருந்ததில்லை. அரபியரல்லாத கூட்டத்தினர் நேர்ச்சை செய்தார்கள் என்று இந்தக் கதையில் கூறப்படுவது பொய் என்பதை இதிலிருந்தும் அறியலாம்.

மேலும் கொள்ளையரைக் கொன்ற மிதியடி அப்துல் காதிருடையது தான் என்று அரபியரல்லாத அந்தக் கூட்டத்தினருக்கு எப்படித் தெரிந்தது?

இப்படி ஒரு நிகழ்ச்சி உண்மையிலேயே நடந்திருந்ததாக வைத்துக் கொள்வோம். அப்படி நடந்திருந்தால் அதுவே இந்த மவ்லிதைத் தீயிலிட்டுக் கொளுத்தப் போதுமான காரணமாகும். இஸ்லாத்துக்கும், குர்ஆனுக்கும் மாற்றமாக ஒருவர் நடந்தால் அவர் இறைநேசராக முடியாது. இறை நேசரல்லாத ஒருவரைப் புகழ்ந்து பாடுவது பெருங்குற்றமாகும்.

இந்தக் கதை உண்மையாக இருந்தால் அப்துல் காதிர் ஜீலானி தம்மைக் கடவுளாக எண்ணியதால் மவ்லிதை ஒழித்துக் கட்ட வேண்டும். இந்தக் கதை பொய்யாக இருந்தால் நல்லடியார் மீது அவதுறு சுமத்துவதால் மவ்லிதை ஒழித்தாக வேண்டும். எப்படிப் பார்த்தாலும் ஒழிக்கப்பட வேண்டிய இந்த அபத்தத்தைப் படிக்கலாமா? மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும்.

அப்துல் காதிர் ஜீலானியை அல்லாஹ்வுக்குச் சமமாக காட்டும் கற்பனைக் கதைகளின் தொகுப்பே முஹ்யித்தீன் மவ்லிது என்பது. இது போன்ற மற்றொரு கதையைப் பார்ப்போம்.

## 11 பார்த்தாலே நேர்வழி?

**فوز واقبال لمن هداه *ومن راى من اقتدى هداه**

அவர் யாருக்கு நேர்வழி காட்டினாரோ அவருக்கும் அவரது நேர்வழியைப் பார்த்தவருக்கும் வெற்றியும், முன்னேற்றமும் உண்டு.

**وروي ان الشيخ رضي الله عنه قال طوبى لمن راني فى حياتي او راى من راني او راى من راى من راني بعد وفاتي وان آخذبيد من عثر عن الاستقامة من مريدي ومحبي ليوم القيامة**

என் வாழ்நாளில் யார் என்னைப் பார்த்தாரோ அவருக்கும், என் மரணத்திற்குப் பின் என்னைப் பார்த்தவர்களைப் பார்த்தவர்களுக்கும், என்னை யார் பார்த்தார்களோ அவர்களைப் பார்த்தவர்களைப் பார்த்தவருக்கும் நல் வாழ்க்கை உண்டு. எனது முரீதுகளிலும், எனது நேசர்களிலும் யாரேனும் நேர்வழியிலிருந்து விலகினால் அவரது கையை நான் பிடித்துக் கொள்வேன். இது கியாமத் நாள் வரையிலும் நடக்கக் கூடியதாகும் என்று அப்துல் காதிர் ஜீலானி கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இதில் எவ்வளவு அபத்தங்கள் உள்ளன என்று ஆராய்வோம்.

அப்துல் காதிர் ஜீலானி இவ்வாறு கூறி இருந்தால் இது அவரது நூல்களிலோ, அவரது உரைத் தொகுப்புக்களிலோ நிச்சயம் இடம் பெற்றிருக்க வேண்டும். அல்லது அவர்கள் காலத்தில் வாழ்ந்த மக்கள் இதைப் பதிவு செய்திருக்க வேண்டும். ஆனால் இப்படி எந்த வரலாற்றுக் குறிப்பும் இந்தக் கூற்றுக்குக் கிடையாது.

அப்துல் காதிர் ஜீலானியைப் பார்த்தவர்களுக்கு நல்வாழ்க்கை உண்டு என்பது இஸ்லாத்தின் அடிப்படைக்கே முரணாகும். அப்துல் காதிர் ஒரு மனிதர். மனிதனை மனிதன் பார்ப்பதால் நல் வாழ்க்கை கிடைத்து விடாது. கடுகளவுக்கு அறிவுடையவனுக்குக் கூட தெரிந்த இந்த உண்மை மவ்லிதை இயற்றியவருக்குத் தெரியவில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை எத்தனையோ காபிர்கள் பார்த்தனர். அபூஜஹ்ல் போன்ற கொடியவர்களும் பார்த்தனர். இவ்வாறு பார்த்தது அவர்களுக்கு இம்மையிலோ, மறுமையிலோ எந்த நல்வாழ்க்கையையும்

அளிக்கவில்லை. நபிகள் நாயகத்தைப் பார்த்ததால் நல்வாழ்வை அடைய முடியவில்லை. ஆனால் அப்துல் காதிர் ஜீலானியைப் பார்த்துவிட்டால் நல்வாழ்வு நிச்சயம் என்ற நச்சுக் கருத்தை எந்த முஸ்லிமாவது ஏற்க முடியுமா?

ஒருவரைப் பார்ப்பதால் பாக்கியம் ஏற்படும் என்பது ஒரு புறமிருக்கட்டும். நல்லடியார் ஒருவருக்குச் சந்ததிகளாக இருப்பது கூட எந்தப் பயனுமளிக்காது என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

நூஹ் நபி, லூத் நபி ஆகியோரின் மனைவியர் அந்த நபிமார்களைப் பார்த்தது மட்டுமன்றி அவர்களுடன் இரண்டறக் கலந்தவர்கள். அவர்களும் கூட நரகை அடைவார்கள் என்று குர்ஆன் கூறுகிறது.

நூஹ் நபியின் மகன் நூஹ் நபியை ஏற்கவில்லை. நூஹ் நபியின் இரத்தம் அவன் உடலில் ஓடியும் கூட அவனும் அழிந்து போனதாகக் குர்ஆன் கூறுகிறது.

இப்ராஹீம் நபி அவர்களின் தந்தையின் நிலையும் இது தான். அவரும் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளானதாக திருக்குர்ஆன் கூறுகிறது.

இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களின் பெரிய தந்தையாக இருந்தும் அபூலஹப் அல்லாஹ்வின் கோபத்திற்குள்ளாளான்.

மிகப் பெரிய நபிமார்களை நேரடியாகப் பார்த்தது மட்டுமின்றி அவர்களுடன் இரத்த சம்பந்தமான உறவும் உள்ளவர்களின் நிலை இது. ஆனால் அப்துல் காதிரைப் பார்த்து விட்டாலே மோட்சம் கிடைத்து விடுமாம். அது மட்டுமின்றி அவரைப் பார்த்தவர்களை யார் பார்க்கின்றார்களோ அவர்களுக்கும் மோட்சம் கிடைத்து விடுமாம். அவரைப் பார்த்தவர்களை பார்த்தவர்களுக்கும் மோட்சம் உண்டாம். நபிமார்களை விட அப்துல் காதிருக்கு இருக்கும் மகிமை சிறந்தது என்று இந்தக் கதை கூறுகிறதே உண்மையான முஸ்லிம்கள் இதை நம்பலாமா?

இதைவிடப் பயங்கரமான மற்றொரு அபத்தத்தைக் கேளுங்கள்.

அப்துல் காதிர் தம் முரீதுகளின் கைகளைப் பிடித்துக் கொண்டிருக்கிறாராம். அவர்கள் தவறான வழியில் சென்றால் உடனே கையைப் பிடித்துத் தடுத்து

நிறுத்தி விடுவாராம். அவர் வாழ்நாளில் மட்டுமின்றி கியாமத் நாள் வரை இதே வேலையாக இருப்பாராம்.

மவ்லிதை இயற்றியவர்கள் சுய சிந்தனையுடன் தான் இவ்வாறு எழுதியுள்ளார்களா? இந்த விபரீதத்தை விளங்காமல் தான் மவ்லவிமார்கள் இதை ஆதரிக்கிறார்களா?

உயிருடன் வாழும் போது கூட ஒருவர் தமது நேசர்களின் கையைப் பிடித்து அவர்களை நேர்வழியில் கொண்டு செல்ல முடியாது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வுலகில் வாழும் போது அவர்கள் வாழ்ந்த ஊரிலேயே சில நபித்தோழர்கள் விபச்சாரம் செய்தனர், திருடினர், கனீமத் பொருட்களை மோசடி செய்தனர். அந்தச் சந்தர்ப்பங்களில் அவர்களது கைளைப் பிடித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடுக்கவில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் நபித்தோழர்களுக்கிடையே மோதல்களும், பிரச்சனைகளும் உருவாயின. இன்றளவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உம்மத்தினர் பலர் பாவங்களில் மூழ்கியுள்ளனர். இவர்களின் கைகளைப் பிடித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடுக்கவில்லை.

ஆனால் அப்துல் காதிர் ஜீலானி என்ற மனிதர் மரணித்த பின் கியாமத் நாள் வரை முரீதுகளின் கைகளைப் பிடித்துக் கரை சேர்ப்பாராம். இதை நம்ப முடிகின்றதா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மட்டம் தட்டி அல்லாஹ்வுக்கு நிகராக அப்துல் காதிரை உயர்த்த வேண்டும் என்ற சதியின் ஒரு பகுதியே இந்த மவ்லிது என்பது இப்போதாவது புரிகின்றதா?

அப்துல் காதிரின் முரீதுகள் எனப்படுவோர் பலர் இன்று சினிமாத் தயாரிப்பில் ஈடுபடுவதையும் சினிமா விநியோகிஸ்தர்களாக உள்ளதையும் ஹராமான பல வழிகளில் பொருளீட்டுவதையும் காண்கிறோம். தொழுகையைக் கூட நிறைவேற்றாமல் அவர்களில் பலர் இருப்பதைக் காண்கிறோம். இவர்களின்

கையைப் பிடித்து அப்துல் காதிர் தடுக்கவில்லை. தடுக்க முடியாது என்பதற்கு இதை விட வேறு சான்று தேவையில்லை.

அப்துல் காதிர் ஜீலானியை அல்லாஹ்வுக்குச் சமமாக்கும் கதைகளின் தொகுப்பே முஹ்யித்தீன் மவ்லிது என்பதற்கு மற்றொரு சான்றைப் பார்ப்போம்.

11 கனவில் கட்டளையிட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்?

**كم من رجال بشر النبي *ان الزم الذي هو النقي**

**الشيخ عبد القادر الرضي *فى العالمين دافع الملامة**

துன்பங்களை நீக்கக்கூடிய அகில உலகிலும் அல்லாஹ்வின் திருப்தியைப் பெற்ற தூயவரான பெரியார் அப்துல் காதிரைப் பற்றிப் பிடியுங்கள் என்று எத்தனையோ மனிதர்களுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நற்செய்தி கூறியுள்ளனர்.

அப்துல் காதிர் ஜீலானியின் காலத்துக்கு ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவரைப் பற்றிப் பிடிக்குமாறு எப்படிக் கூறியிருப்பார்கள்? அவர்கள் அவ்வாறு கூறியிருந்தால் அது ஆதாரப்பூர்வமான ஹதீஸ் நூல்களில் பதவு செய்யப்பட்டிருக்குமே? எந்த ஹதீஸ் நூல்களில் இந்த முன்னறிவிப்பு இடம் பெற்றுள்ளது? என்றெல்லாம் யாரும் விளக்கம் கேட்டுவிடக் கூடாது என்பதற்காக ஹிகாயத் பகுதி பின்வருமாறு விளக்கம் தருகின்றனர்.

நான் சிறுவனாக இருந்த போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் கண்டேன். அல்லாஹ்வின் வேதம் உங்கள் வழிமுறை இரண்டினடிப்படையில் நான் மரணிக்க அல்லாஹ்விடம் துஆச் செய்யுங்கள் என்று நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கூறினேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நீ பைஅத் செய்வதற்கு ஏற்ற பெரியார் அப்துல் காதிர் தாம் என்று கூறினார்கள். மூன்று தடவை இதை நான் கேட்டேன். மூன்று தடவையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதே பதிலையே கூறினார்கள். நான் விழித்தவுடன் என் தந்தையிடம் இதைக் கூறினேன். இஸ்லாமியப் பெரியார்களுக்கெல்லாம் பெரியாரைச் சந்திக்கப் புறப்பட்டோம். அவர்கள் உரை நிகழ்த்தத் தயாராக ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். மக்கள் நெருக்கத்தினால் அவர்களை நாங்கள் நெருங்க முடியவில்லை. எனவே தொலைவில் தங்கி விட்டோம். அவர்கள் தம் உரையை இடையில் நிறுத்தி அவ்விருவரையும் என்னிடம் கொண்டு வாருங்கள் என்று சைகை செய்தார்கள். சிலரது தோள்களில் சுமக்கப்பட்டு அவர்களது ஆசனத்தின் அருகில் கொண்டு செல்லப்பட்டோம். முன்னறிவிப்பின்றி நம்மிடம் வந்திருக்க மாட்டீர்கள் என்று எங்களிடம் கூறிவிட்டு தமது சட்டையை என் தந்தைக்கும் தமது கிரீடத்தை

எனக்கும் அணிவித்ததார்கள். இஸ்னாத் (அறிவிப்பாளர் தொடர்) சீட்டை எங்களுக்கு எழுதித் தந்தார்கள் என்று அபுல் ஹஸன் கூறுகிறார்.

இந்த ஹிகாயத்தில் எவ்வளவு அபத்தங்கள் உள்ளன என்பதை ஆராய்வோம். அப்துல் காதிர் ஜீலானியிடம் பைஅத் செய்யுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கனவில் கட்டளையிட்டதாக இந்தக் கதை கூறுகிறது.

பித்அத்களை உருவாக்கியவர்களும், தமக்கு மக்கள் கூடுதலான மயாதை அளிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பவர்களும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் கண்டதாகக் கூறி வருகின்றனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் காண முடியுமா? இது பற்றி மார்க்கம் சொல்வது என்ன என்பது கூட இவர்களுக்குத் தெயவில்லை.

யார் என்னைக் கனவில் காண்கிறாரோ, அவர் விழிப்பிலும் என்னைக் காண்பார் என்பது நபிமொழி.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: புகாரி 6993

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் காண்பவர் விழித்தவுடன் நேலும் அவர்களைக் காண்பார் என்பதன் பொருள் என்ன? விழித்தவுடன் நேரிலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் காண்பது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உயிரோடு இவ்வுலகில் வாழ்ந்த காலத்துக்கு மட்டுமே பொருந்தும். நபித்தோழர்கள் தமது கனவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கண்டால் விழித்த பின் நேரடியாகவும் அவர்களைக் காண்பார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்துக்குப் பின்னால் வாழ்ந்து வரும் மக்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நிச்சயமாகக் கனவில் காண முடியாது. கனவில் கண்டால் விழிப்பிலும் காண்பார்கள் என்பது இந்த மக்களுக்குக் கடுகளவும் பொருந்தாது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் இந்தப் பொன்மொழியில் நம்பிக்கை உள்ள யாரும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் கண்டதாக கூற மாட்டார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கனவில் கண்டதாகக் கூறும் யாரும் ஏமாற்றுப் பேர்வழிகள் என்பதை இந்த நபிமொழியிலிருந்து அறியலாம்.

ஒருவரைக் கனவில் கண்டு அவரைத் தான் கனவில் கண்டோம் என்று உறுதி செய்வதென்றால் அவரை நாம் முன்னரே நேரடியாகப் பார்த்திருப்பது அவசியமாகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நேரடியாகப் பார்க்காதவர்கள் கனவில் வந்தது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாம் என்று எப்படி உறுதிப்படுத்திக் கொண்டார்கள்? இதையும் நாம் சிந்திக்க வேண்டும். மார்க்கத்தின் எல்லா அம்சத்தையும் முழுமையாக மக்களுக்கு அறிவித்துத் தரும் பணியைப் பூரணமாக நிறைவேற்றிவிட்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சென்று விட்டனர். கனவில் வந்து எதையும் அவர்கள் சொல்லித் தரவேண்டிய அவசியம் ஏதுமில்லை என்பதையும் நாம் உணர்ந்தாக வேண்டும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என் கனவில் இதைக் கூறினார்கள். அதைக் கூறினார்கள் என்றெல்லாம் பல பெரியார்கள்(?) கூறியுள்ளனர். அந்தக் காரியங்கள் உயிரோடு வாழ்ந்த காலத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்த காரியங்களாக உள்ளன. தாம் உயிரோடு வாழ்ந்த போது தடுத்த காரியங்களை தம் மரணத்திற்குப் பின் கனவில் வந்து அனுமதிப்பார்கள் என்பதை அறிவுள்ள எவரும் ஏற்க மாட்டார்கள். இதிலிருந்து கனவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வந்ததாகக் கூறுவது வடிகட்டிய பொய் என்பதை அறியலாம். மக்கள் தங்களைப் பெரியார் என்று நம்பி மதிக்க வேண்டும் என்பது தான் இதற்குக் காரணம்.

அப்துல் காதிர் ஜீலானியிடம் சென்று பைஅத் செய்யுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மூன்று தடவை வலியுறுத்திக் கூறியதாக கூறப்படுவது மற்றொரு அபத்தமாகும்.

பைஅத் என்றால் உறுதிமொழி எடுத்தல் என்பது பொருள்

ஒருவருடன் மற்றொருவர் செய்து கொள்ளும் ஒப்பந்தம் (பைஅத்) செய்து கொள்ள இஸ்லாம் அனுமதிக்கின்றது.

ஒரு நிறுவனத்தின் பணிபுரியச் செல்பவர் அந்த நிறுவனத்தினருடன் நான் இந்த நிறுவனத்தின் விதிகளுக்குக் கட்டுப்பட்டு விசுவாசமாகப் பணியாற்றுவேன் என்று பைஅத் (உறுதிமொழி) எடுக்கலாம். ஒரு நிறுவனத்தில் பணியாற்றுவர் அந்த நிறுவனத்தின் பணிகள் குறித்து மற்றொரு நிறுவனத்தில் உறுதிமொழி எடுத்தால் அதை முட்டாள்தனம் என்போம்.

தொழுகை, நோன்பு போன்ற பல வணக்க வழிபாட்டு முறைகளை முறையாக நிறைவேற்றுவேன் என்று உறுதிமொழி எடுப்பதில் தவறில்லை. யாரிடம் எடுக்க வேண்டும் என்பது தான் பிரச்சினை. இந்த வணக்க வழிபாடுகள் யாவும் இறைவனுக்குச் சொந்தமானவை . அதை நிறைவேற்றுவதன் பயனையும் நிறைவேற்றாவிட்டால் ஏற்படும் தண்டனையையும் இறைவன் தான் வழங்குவான்.

நிச்சயமாக துய இந்த மார்க்கம் அல்லாஹ்வுக்கே சொந்தமானது.

(அல்குர்ஆன் 39:3)

மார்க்கம் அல்லாஹ்வுக்குச் சொந்தமானது என்பதால் மார்க்கம் சம்பந்தப்பட்ட விஷயங்களை ஒழுங்காக நிறைவேற்றுவேன் என்று இறைவனிடம் தான் பைஅத் செய்ய வேண்டும். இந்த வணக்கங்களை நம்மைப் போலவே நிறைவேற்றக் கடமைப்பட்ட ஒருவரிடம் இந்த வணக்கங்களுக்கான கூலியைத் தர முடியாத ஒருவரிடம் இவற்றை நிறைவேற்றாவிட்டால் தண்டிக்கும் உரிமையில்லாத ஒருவரிடம் இந்த வணக்கங்கள் பற்றி நம்மைப் போலவே இறைவனால் விசாரிக்கப்படும் நிலையிலுள்ள ஒருவரிடம் இது பற்றி உறுதி மொழி எடுப்பது அபத்தமானதாகும். அவரை அல்லாஹ்வுக்குச் சமமமாக கருதுவதுமாகும்

ஒருவர் சம்பந்தப்பட்ட . பைஅத் உறுதிமொழியை அவரால் நியமிக்கப்பட்ட அவரது தூதரிடம் எடுக்கலாம். இதை யாரும் அபத்தமாகக் கருத மாட்டார்கள். ஒரு நாட்டுடன் மற்றொரு நாடு செய்து கொள்ளும் ஒப்பந்தங்களில் அந்தந்த நாட்டு

ஆட்சித் தலைவர்களால் நியமிக்கப்பட்ட தூதர்கள் கையொழுத்திடுவதை நாம் பார்க்கிறோம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட தூதராக இருப்பதால் அல்லாஹ்வுக்குச் சொந்தமான விஷயத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் பைஅத் செய்யலாம். பைஅத் வியாபாரம் செய்யும் பெரியார்கள்(?) இறைவன் சம்பந்தப்பட்ட காரியங்களில் உறுதிமொழி பெற எந்த அதிகாரமும் பெற்றிருக்கவில்லை. அவர்களில் யாரும் அல்லாஹ்வின் தூதர்களுமல்லர். எனவே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் நபித் தோழர்கள் செய்த உடன்படிக்கையை ஆதாரமாகக் கொண்டு தங்களின் பைஅத் வியாபாரத்தை நியாயப்படுத்தினால் அவர்கள் தங்களை இறைவனின் தூதர்களாகவும் இறைவன் சார்பாக உறுதிமொழி பெற அதிகாரம் வழங்கப்பட்டவர்களாகவும் கருதுகின்றார்கள் என்பதே பொருள்.

உம்மிடத்தில் உறுதி மொழி எடுத்தோர் அல்லாஹ்விடமே உறுதி மொழி எடுக்கின்றனர். அவர்களின் கைகள் மீது அல்லாஹ்வின் கை உள்ளது. யாரேனும் முறித்தால் அவர் தனக்கெதிராகவே முறிக்கிறார். யார் தம்மிடம் அல்லாஹ் எடுத்த உறுதி மொழியை நிறைவேற்றுகிறாரோ அவருக்கு மகத்தான கூலியை அவன் வழங்குவான்.

(அல்குர்ஆன் 48:10)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் செய்த உறுதிமொழியைத் தன்னிடம் செய்து கொள்ளும் உறுதிமொழியாக இறைவன் அங்கீகரிப்பதற்கு இவ்வசனமே சான்று.

ஒருவர் கனவு கண்டால் அதை மற்ற எவராலும் அறிந்து கொள்ள முடியாது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தினமும் காலையில் உங்களில் யாரேனும் நேற்றிரவு கனவு கண்டீர்களா? என்று விசாரிக்கும் பழக்கமுடையவர்களாக இருந்தனர்.

நீங்கள் இன்னின்ன கனவுகளைக் கண்டீர்கள் என்று கனவைக் கண்டுபிடித்துக் கூறாமல் மக்களிடமே கேட்டுத் தெரிந்துள்ளனர். ஆனால் அபுல் ஹஸன் கண்ட கனவை அப்துல் காதிர் ஜீலானி தாமே அறிந்து கொண்டதாக இந்தக் கதை கூறுகிறது. மறைவான ஞானம் அப்துல் காதிருக்கு இருப்பதாகக் காட்டி அவரை அல்லாஹ்வுக்குச் சமமமாக அல்லாஹ்வின் தூதருக்கும் மேலாக ஆக்குவது தான் இந்தக் கதையின் நோக்கம். இது போன்ற அபத்தங்கள் தாம் முஹ்யித்தீன் மவ்லிது.

அப்துல் காதிர் ஜீலானியைப் புகழ்கிறோம் எனப் பெயரால் புராணங்களைத் தோற்கடிக்கும் அளவுக்குக் கற்பனை செய்து எழுதப்பட்டது தான் முஹ்யித்தீன் மவ்லிது. இதை நிரூபிக்கும் மற்றொரு சான்றைப் பார்ப்போம்.

### 11 கனவில் நடந்த கொலை!

**قد قال سافر لامرء ابيل *لمنعه الحماد عن رحيل**

**لما راى من قتله الوبيل *فانني لكم ذو زعامة**

**فصار ذاك القتل فى المنام *والنهب نسي ماله القوام**

**بما دعى الله على اهتمام *مقدار عين كاشف الندامة**

ஒரு மனிதர் கொடூரமாகக் கொலை செய்யப்படுவார் என்பதை அறிந்த ஹம்மாம் அம்மனிதரைப் பயணம் செய்வதை விட்டும் தடுத்தார். அப்போது அப்துல் காதிர் ஜீலானி பொறுப்பாளர் என அம்மனிதர் கூறினார். இதன் பிறகு அப்துல் காதிர் ஜீலானி முக்கியத்துவம் கொடுத்து அல்லாஹ்விடம் துஆச் செய்ததால் அம்மனிதர் கொல்லப்படுதல் கனவு மூலமும், கொள்ளையடிக்கப்படுதல் அவர் பொருளை மறப்பதன் மூலமும் நிறைவேறியது.

முஹ்யித்தீன் மவ்லிதில் கூறப்படும் இந்த வரிகளுக்கு விளக்கவுரையாக ஹிகாயத் பகுதியில் கூறப்படுவதையும் அறிந்து விட்டு இதை அலசுவோம்.

எழுநூறு தங்கக் காசுகள் பொறுமானமுள்ள பொருட்களை சிரியா நாட்டிற்கு வியாபாரத்திற்காக கொண்டு செல்ல நாடுகிறேன் என்று அபுல் முளப்பர் என்பார் ஹம்மாத் எனும் பெரியாடம் கூறினார். அதற்கு ஹம்மாத் அவ்வாறு செய்யாதே. நீ பயணம் செய்தால் கொல்லப்படுவாய். உன் உடமைகள் பறிக்கப்படும் எனக்

கூறினார். (இதைக் கேட்டு) மனம் உடைந்தவராக அபுல் முளப்பர் வெளியே வந்தார். அவரை அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் வழியில் கண்டார்கள். ஹம்மாத் கூறியதை அபுல் முளப்பர் விளக்கினார்கள். அப்போது அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் நீ பயணம் செய். எவ்வித இடையூறுமின்றி புறப்பட்டு இலாபத்துடன் திரும்பி வருவாய். உன் உயிரையும், உடமைகளையும் பாதுகாப்பது என் பொறுப்பு என்று கூறினார்கள். உடனே அபுல் முளப்பர் புறப்பட்டார். தமது பொருட்களை ஆயிரம் தங்கக் காசுகளுக்கு விற்றார். ஒரு நாள் மல ஜலம் கழிக்கச் சென்ற அவர் பணப்பையை மறதியாக வைத்து விட்டார். தமது கூடாரத்தை அடைந்ததும் அவருக்குத் தூக்கம் மேலிட்டது. வணிகக் கூட்டத்துடன் அவர் செல்லும் போது கொள்ளைக் கூட்டம் ஒன்று வழிமறித்து அவரையும், வணிகக் கூட்டத்தையும் தாக்கி வணிகக் கூட்டத்தினர் உடைமைகளையும் பறித்துக் கொண்டது போல் கனவு கண்டார். உடனே விழித்துப் பார்த்ததும் தமது கழுத்தில் இரத்தக் கறையைப் பார்த்தார். கடுமையான வேதனையையும் உணர்ந்தார். உடனே தங்கக் காசு நினைவுக்கு வந்தது. அதைத் தேடிய போது அவர் வைத்த இடத்தில் அப்படியே இருந்தது.பின்னர் பாக்தாத் வந்தார். பெரியவரான ஹம்மாதை முதலில் சந்திப்பதா? சொன்ன சொல்லைக் காப்பாற்றிய அப்துல் காதிர் ஜீலானியைச் சந்திப்பதா? என்று குழம்பினார். அப்போது வழியில் பெரியார் ஹம்மாதைக் கண்டார். அவரிடம் அபுல் முளப்பரே பெரியார் அப்துல் காதிரை முதலில் சந்திப்பீராக.! ஏனெனில் அவர் உனக்காகப் பதினேழு தடவை அல்லாஹ்விடம் துஆச் செய்தார். உமக்கு எழுதப்பட்ட விதியை மாற்ற எழுபது தடவைகள் துஆச் செய்தார். நீ கொல்லப்பட வேண்டும் என்ற விதி கனவில் கொல்லப்பட்டதன் மூலம் நடந்தேறியது. உமது உடமைகள் பறிக்கப்படுவது என்ற விதி உடமையை நீ மறந்து வைத்ததன் மூலம் நடந்தேறியது எனக் கூறினார். இதை அபூமஸ்வூத் அறிவிக்கிறார்.

அல்லாஹ்வை மறக்கடிக்கச் செய்து அல்லாஹ்வின் ஆற்றலைக் குறைத்து அப்துல் காதிரையும், ஹம்மாதையும் அல்லாஹ்வுக்கு நிகராக ஆக்குவதே இந்தக் கவிதையின் நோக்கம் என்பது இந்த ஹிகாயத்திலிருந்து புலனாகிறது.

அபுல் முளப்பர் என்பார் பிரயாணம் சென்றால் அவர் கொல்லப்படுவார்; அவரது உடமைகள் பறிக்கப்படும் என்ற விபரம் ஹம்மாதுக்கு எப்படித் தெரிந்தது?

எந்த ஆத்மாகவும் தன் மரணத்தையே அறிய முடியாது என்று அல்லாஹ் கூறும் போது

(அல்குர்ஆன் 31:34)

இன்னொருவன் மரணம் பற்றி ஹம்மாத் முன்கூட்டியே அறிய முடிந்தது எப்படி?

இது ஹம்மாத் என்பவரை அல்லாஹ்வாக ஆக்கும் விபரீதப் போக்கல்லவா? மவ்லிது அபிமானிகள் இதைச் சிந்திக்கட்டும்.

அபுல் முளப்பர் பிரயாணம் செய்வார் என்பதும், அதிலே கொல்லப்படுவார் என்பதும் அல்லாஹ்வின் விதியாக இருந்தால் அதை ஹம்மாத் ஒரு வாதத்துக்காக அறிந்திருந்தால் அந்த விதி நிறைவேறுமாறு விட்டிருக்க வேண்டுமே தவிர அந்த விதியை வெல்லும் வழியைக் கூறியிருக்கக் கூடாது. அபுல் முளப்பர் சாவார் என்ற அல்லாஹ்வின் விதியை ஹம்மாத் அறிந்து கொண்டது மட்டுமின்றி அல்லாஹ்வின் விதியை மாற்றியமைக்கவும் முயன்றுள்ளார். அல்லாஹ் பலவீனமானவனாகவும் ஹம்மாத் பலம் பொருந்தியவராகவும் சித்திக்கப்படுகின்றனர்.

அவர் கொல்லப்படுவார் என்பது மட்டும் விதியன்று அவர் பயணம் செய்வார் என்பதும் விதி தான். இந்த விதியை வெல்ல முயன்றிருக்கிறார்.

இந்த விதியை அப்துல் காதிர் ஜீலானியும் அறிந்திருக்கிறார். அல்லாஹ்வின் விதி இது தான் என்று தெரிந்திருந்தும் அபுல் முளப்பர் என்பாரிடம் வெற்றிகரமாகத் திரும்பி வருவீர் எனக் கூறி அனுப்புகிறார். இவையெல்லாம் அல்லாஹ்வின் மகத்துவத்தைக் குறைத்து மனிதர்களுக்கு மகத்துவத்தை அதிகப்படுத்துவதற்காகச் செய்யப்பட்ட திட்டமிட்ட சதி என்பதை நிரூபிக்கின்றது.

அல்லாஹ்விடம் துஆச் செய்து இந்த விதியை மாற்றியமைக்குமாறு அப்துல் காதிர் ஜீலானி துஆச் செய்து தானே விதியை மாற்றினார் என்று யாரும் கூற முடியாது. ஏனெனில் துஆச் செய்வதற்கு முன்பே விதியை மாற்றியமைக்கும் உத்திரவாதத்தை அப்துல் காதிர் ஜீலானி வழங்கி விட்டார். அல்லாஹ்விடம்

துஆச் செய்து அதனால் அபுல் முளப்பர் என்பாரின் விதி மாற்றியமைக்கப்பட்ட விதத்தைக் கவனியுங்கள். கோமாளித்தனமாக நாடகம் ஒன்றை இதற்காக மவ்லுது எழுதியவர் கற்பனை செய்கிறார்.

கனவில் அவர் கொல்லப்பட்டதாகக் காண்கிறாராம். இதன் மூலம் அவர் கொல்லப்படுவார் என்ற விதி நிறைவேறியதாம். அவர் பணப்பையை மறதியாக ஓரிடத்தில் வைத்து விட்டாராம். இதன் மூலம் உடைமை பறிக்கப்படும் என்ற விதி நிறைவேறியதாம். கனவில் கொல்லப்பட்டதாகக் காண்பது உண்மையில் கொல்லப்பட வேண்டும் என்ற விதிக்கு நிகராகுமா?

ஒரு மனிதன் ஒரு தடவை தான் சாவான் என்பது விதி. கனவில் தாம் செத்ததாக கனவு காண்பவர்கள் பிறகு சாகவே மாட்டார்களா? அபுல் முளப்பர் கனவில் செத்து விட்டதால் இன்று வரை உயிருடன் இருக்கிறார் என்று கூறப் போகிறார்களா?

அபுல் முளப்பர் கொல்லப்படுவார் என்பது அல்லாஹ்வின் விதியானால் அதை அல்லாஹ் செயல்படுத்தியிருப்பான். அதை மாற்றியமைக்க அல்லாஹ் நாடினால் நேரடியாக அதை மாற்றியமைப்பான். இப்படி நாடகம் நடத்தி யாரையும் திருப்திப்படுத்த வேண்டிய அவசியம் இறைவனுக்கு இல்லை.

அபுல் முளப்பர் கொல்லப்படுவார் என்ற விதி என்னவயிற்று என்று யாரோ கேட்டது போலவும் அவர்களுக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்பதற்காக கனவில் அதை நிறைவேற்றியது போன்றும் அல்லாஹ் நடந்து கொண்டதாக கற்பனை செய்துள்ளனர்.

இஸ்லாத்தைப் பற்றிய அறிவு சிறிதுமற்ற முகவரியில்லாத யாரோ அறிவிலி எழுதிய இந்தப் பாட்டைப் படிப்பதால் நன்மை கிடைக்குமா? பாவம் சேருமா? அர்த்தம் தெரியாமல் மவ்லிது பக்தியில் கிடப்போர் சிந்திக்கட்டும்.

அப்துல் காதிர் ஜீலானியைப் புகழ்கிறோம் என்ற பெயரால் புராணங்களைத் தோற்கடிக்கும் அளவுக்குக் கற்பனைக் கதைகளை உருவாக்கி அதையே

முஹ்யித்தீன் மவ்லிது என்று அறிமுகம் செய்தனர் என்பதை நிரூபிக்கும் மற்றொரு சான்றைப் பார்ப்போம்.

## 11 ஜின்னிடமிருந்து மீட்டவர்!

**ادى لعبد الله ذي النبالة *بنتا له اذ بلغوا الرسالة**

**قدموس جن الكرخذو الضخامة *من قطبهم هادي اولى الضلالة**

அப்துல்லாஹ் என்பாரின் மகனை கர்க் எனும் பகுதியில் இருந்த சக்தி வாய்ந்த ஜின்னிடமிருந்து அப்துல் காதிர் மீட்டுக் கொடுத்தார். வழிகேடர்களுக்கு வழிகாட்டக்கூடிய மக்களுக்கு அச்சாணியாகத் திகழ்ந்த அப்துல் காதிரிடம் அவர் முறையிட்ட போது இவ்வாறு நிகழ்த்திக் காட்டினார்.

இந்தக் கவிதை வரியில் என்ன கூறப்படுகின்றது என்பதை ஹிகாயத் பகுதியின் துணையுடன் விளங்குவோம். அதன் பிறகு இதிலுள்ள அபத்தங்களை அலசுவோம்.

அப்துல் ஹக் கூறுகிறார்.

என் மகள் மாடியின் மேற்பகுதியிலிருந்து அடையாளம் தெரியாமல் கடத்தப்பட்டாள். நான் அப்துல் காதிர் ஜீலானியிடம் வந்து விபரம் கூறினேன். அதற்கவர் கர்க் எனும் பகுதியில் உள்ள பாழடைந்த இடத்துக்குச் சென்று மன நிம்மதியுடன் அமர்வீராக. அல்லாஹ்வின் பெயரால் அப்துல் காதிரின் எண்ணப்படி எனக் கூறி உம்மைச் சுற்றி ஒரு வட்டம் போடுவீராக. இரவு சூழ்ந்தததும் ஜின் பயங்கரமான தோற்றத்தில் உம்மைக் கடந்து செல்லும். பின்னர் ஜின்களின் அரசர் புடை சூழ வருவார். அவர் உமது நோக்கத்தைப் பற்றிக் கேட்பார். என்னைப் பெரியார் அப்துல் காதிர் அனுப்பியதாகக் கூறிவிட்டு உன் மகள் காணாமல் போனதைக் கூறு என்றார். அவ்வாறே நான் சென்று அவர் கட்டளையிட்டவாறு செய்தேன். அவர் கூறியவாறு நடந்ததைக் கண்டேன். ஜின்களின் அரசர் குதிரையில் ஏறி வந்தார். அவரது படையினர் அவரைச் சுற்றிக் காவலுக்கு வந்தனர். அவர் நின்று மனித இனத்தைச் சேர்ந்தவனே! உனக்கு என்ன நேர்ந்தது எனக் கேட்டார். அப்துல் காதிர் உம்மிடம் என்னை அனுப்பினார் என்று நான் கூறினேன். உடனே அவர் கீழே இறங்கி மண்ணை முத்தமிட்டு வட்டத்தின் வெளியில் அமர்ந்தார். நான் மகள் விஷயத்தைத் தெரிவித்தேன். உடனே அவர் தம்மைச் சூழ நின்றவர்களை நோக்கி இவர் மகளைக் கடத்தியவர் யார்? எனக் கேட்டார்.

யாருக்கும் தெரியவில்லை. பின்னர் சீன நாட்டைச் சேர்ந்த முரட்டு ஜின் ஒன்று கொண்டு வரப்பட்டது. அதன் கழுத்தை அவர் வெட்டி விட்டு என் மகளை என்னிடம் ஒப்படைத்தார்.

முஹ்யித்தின் மவ்லிதின் ஹிகாயத்தில் கூறப்படும் விளக்கம் இது தான். இந்தக் கவிதையிலும், விளக்கத்திலும் கூறப்படும் அபத்தங்களை ஒவ்வொன்றாக நாம் ஆராய்வோம்.

இந்தக் கவிதையின் நாயகனாகக் கூறப்படும் அப்துல் ஹக் என்பார் யார்? இவரது வரலாறு என்ன? யாருக்கும் தெரியாது.

ஜின்கள் இவரது மகளைக் கடத்திச் சென்ற விபரமும் அதன் பிறகு நடந்த நிகழ்ச்சிகளும் முன் கூட்டியே அப்துல் காதிர் ஜீலானிக்கு எவ்வாறு தெரிந்தது? மறைவான விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய முடியாது என்பதைத் தக்க சான்றுகளுடன் முன்னர் நாம் விளக்கியுள்ளோம். இந்தச் சான்றுகளுக்கு முரணாக இந்தக் கதை அமைந்துள்ளது.

ஜின் என்றொரு படைப்பு இருப்பது உண்மை தான். ஆயினும் அவை மனிதர்களைக் கடத்திச் செல்லும் என்பதற்கு எந்த ஆதாரமும் குர்ஆனிலோ, ஹதீஸிலோ கிடையாது. கெட்ட ஜின்களாக இருந்தால் கூட அவை இறைவனது கட்டளைக்கு மாறு செய்யுமே தவிர மனிதர்களைக் கடத்திச் செல்லும் என்பதற்கு எந்தச் சான்றுமில்லை.

அப்துல் காதிர் ஜீலானி காலத்திற்கு முன்பிலிருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலம் வரையிலுள்ள ஐநூறு வருடங்களில் எந்த ஆணும் பெண்ணும் ஜின்களால் கடத்திச் செல்லப்பட்டதாகவும் ஆதாரம் இல்லை.

ஜின்கள் மனிதர்களைக் கடத்திச் செல்லும் வழக்கமுடையவை என்றால் அறுநூறு கோடிக்கும் அதிகமான மக்கள் வாழும் இன்றைய உலகில் எந்த மனிதனும் ஜின்களால் கடத்தப்படாத மர்மம் என்ன?

இந்தக் கதையில் சீனாவைச் சேர்ந்த முரட்டு ஜின் கடத்தியதாகக் கூறப்படுகின்றது. ஒரு வேளை சீனாவில் தான் மனிதக் கடத்தலில் ஈடுபடும்

ஜின்கள் இருக்க கூடுமோ? என்று கருத முடியவில்லை. ஏனெனில் சீனாவிலும் கூட ஜின்களால் எந்த மனிதனும் கடத்தப்படவில்லை. எவனோ கற்பனை செய்து உளறியிருக்கிறான் என்பதே உண்மை.

ஜின்கள் மனிதர்களைக் கடத்திச் சென்று விடும் என்பதை ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டாலும் கூட ஜின்கள் அப்துல் காதிர் ஜீலானிக்குக் கட்டுப்பட்டு நடக்கும் என்பது குர்ஆனுடைய போதனைக்கு மாற்றமாகும்.

ஜின்கள் மனிதர்களை விட அதிகமான ஆற்றலுடையவை. மனிதர்களால் செய்ய முடியாத பல காரியங்களை அவை செய்து முடித்து விடும் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. சுலைமான் நபி காலத்தில் அண்டை நாட்டு அரசியின் சிம்மாசனத்தைக் கண் மூடி திறப்பதற்குள் கொண்டு வருவதாக ஒரு ஜின் கூறிய விபரம் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. (அல்குர்ஆன் 27:40)

மனிதனைப் போல் பகுத்தறிவும் ஜின்களுக்கு உள்ளது. என்னை வணங்குவதற்காகவே ஜின்களையும் மனிதர்களையும் படைத்துள்ளேன் என்று இறைவன் கூறுகிறான். (51.56)

பகுத்தறிவு வழங்கப்பட்டவர்களுக்குத் தான் இறைவன் சட்ட திட்டங்களை வழங்கியுள்ளான். மனிதனைப் போலவே ஜின்களும் இறைவனை வணங்கக் கடமைப்பட்டுள்ளன என்பதிலிருந்து ஜின்களுக்குப் பகுத்தறிவு உள்ளதை அறியலாம்.

மனிதனைப் போலவே பகுத்தறிவு வழங்கப்பட்டு, மனிதர்களை விடப் பல மடங்கு ஆற்றலும் வழங்கப்பட்ட ஜின்களை மனிதன் ஒருக்காலும் வசப்படுத்த முடியாது. யானை சிங்கம் போன்ற விலங்குகளை மனிதன் வசப்படுத்தலாம்; அவற்றின் வலிமை மனிதனை விட அதிகம் என்றாலும் பகுத்தறிவு அவற்றுக்கு இல்லாததால் அவற்றை மனிதன் வசப்படுத்திக் கொள்கிறான். ஜின்களுக்குப் பகுத்தறிவும் மனிதனை விட அதிகமான ஆற்றலும் இருப்பதால் அவற்றை மனிதனால் கட்டுப்படுத்த முடியாது என்பது தான் உண்மை.

சுலைமான் நபிக்கு அல்லாஹ் தனிச் சிறப்பாக ஜின்களை வசப்படுத்திக் கொடுத்திருந்தான். இது அவர்களுக்கு மட்டும் இறைவன் வழங்கிய தனிச் சிறப்பாகும்.

என் இறைவா! என்னை மன்னித்து விடு! எனக்குப் பின் யாருக்கும் கிடைக்காத ஆட்சியை எனக்கு வழங்கு! நீயே வள்ளல் என (சுலைமான்) கூறினார்.

அல்குர்ஆன் 38:35)

சுலைமான் நபியவர்கள் தமக்கு வழங்கப்பட்ட அளவு அதிகாரம் யாருக்கும் வழங்க வேண்டாம் என துஆச் செய்துள்ளதில் ஜின்களை வசப்படுத்தும் அதிகாரமும் அடக்கம்.

நேற்றிரவு ஒரு ஜின் அட்டூழியம் செய்தது. அதைப் பிடித்து துணில் கட்டி வைத்து காலையில் உங்களுக்குக் காட்ட நினைத்தேன். என் சகோதரர் சுலைமானின் துஆ நினைவுக்கு வந்ததால் அதை விட்டு விட்டேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ள

சுலைமான் நபியின் பிரார்த்தனையில் ஜின்களை வசப்படுத்தியிருந்ததும் அடங்கும் என்பதை இந்த ஹதீஸிலிருந்து அறியலாம்.

இந்தக் கதையில் அப்துல் காதிருடைய பெயரால் போடப்பட்ட வட்டத்துக்குள் நுழைய ஜின்களின் அரசர் அஞ்சியுள்ளார். அப்துல் காதிருடைய பெயரைக் கேட்டதும் குதிரையிலிருந்து (ஜின்களுக்கு ஏன் குதிரை?) இறங்கி மண்ணை முத்தமிட்டுள்ளார். அப்துல் காதிருக்கு ஜின்களும், ஏனைய படைப்புக்களும் கட்டுப்பட்டன என்று பிரமையை ஏற்படுத்தி அவரால் ஆகாதது ஏதுமில்லை என்று நம்ப வைத்து அப்துல் காதிரை குட்டித் தெய்வமாக ஆக்குவதே இந்தக் கதையின் நோக்கம்.

இது போன்ற கப்ஸாக்களைப் படிப்பதால் பாவம் சேருமா? புண்ணியம் கூடுமா? மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும். புராணங்களிலிருந்து காப்பியடிக்கப்பட்ட இது போன்ற கதைகளைக் கேள்விப்படும் மற்ற மதத்தவர்கள் இஸ்லாத்தின் பால் அபிமானம் கொள்வார்களா? ஓரிறைக் கொள்கையை ஐயமற

வலியுறுத்துகின்ற மார்க்கத்திற்கு இந்தக் கதைகள் களங்கத்தை ஏற்படுத்துகின்றன. இஸ்லாத்தை நாடி வரும் மக்களைத் தயங்கி நிற்க வைக்கிறது. மவ்லிது அபிமானிகள் இதை உணர்ந்து மவ்லிது பக்தியிலிருந்து விடுபடுவார்கள் என்று நம்புகிறோம்.

அப்துல் காதிர் ஜீலானியைக் கடவுள் நிலைக்கு உயர்த்திக் காட்டக்கூடிய கதைகள் முஹ்யித்தீன் மவ்லிதில் மலிந்து கிடப்பதை இது வரை கண்டோம். இறைவனின் தன்மைகளை அவருக்கு வழங்கி அவரை நேரடியாக அழைத்துப் பிரார்த்தனை செய்யும் வகையிலும் பல வரிகள் முஹ்யித்தீன் மவ்லிதில் இடம் பெற்றுள்ளன. அவற்றை இங்கு காண்போம்.

## 11 எல்லா நேரமும் இரட்சகர்!

**انت حقا محيى الدين *انت قطب باليقين**

**كنت غوثا كل حين *فادفعن عنا حينا**

நிச்சயமாக நீங்கள் இம்மார்க்கத்தை உயிர்ப்பித்தவராவீர். உறுதியாக நீங்கள் அச்சாணியாகத் திகழ்கிறீர்கள். எல்லா நேரமும் நீங்கள் இரட்சகராக இருக்கிறீர்கள். எனவே நாங்கள் அழிவதை விட்டும் எங்களைக் காப்பாற்றுங்கள்.

ஏறத்தாழ தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன் மரணித்து விட்ட அப்துல் காதிர் ஜீலானியிடம் பிரார்த்தனை செய்ய இஸ்லாத்தில் அனுமதி உண்டா? எல்லா நேரத்திலும் இரட்சிக்கக் கூடியவர் என்ற அடைமொழியை அல்லாஹ்வைத் தவிர யாருக்கேனும் பயன்படுத்த அனுமதி உண்டா?

அவன் இரவைப் பகலில் நுழைக்கிறான். பகலை இரவில் நுழைக்கிறான். சூரியனையும், சந்திரனையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறான். ஒவ்வொன்றும் குறிப்பிட்ட காலக்கெடு வரை செல்கின்றன.241

(அல்குர்ஆன் 2:41)

அவனே அல்லாஹ்; உங்கள் இறைவன். அவனுக்கே அதிகாரம். அவனன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள், அணுவளவும் அதிகாரம் படைத்தவர்களல்லர். அவன் இரவைப் பகலில் நுழைக்கிறான். பகலை இரவில் நுழைக்கிறான். சூரியனையும், சந்திரனையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறான். ஒவ்வொன்றும் குறிப்பிட்ட காலக்கெடு வரை செல்கின்றன. அவனே அல்லாஹ்; உங்கள் இறைவன். அவனுக்கே அதிகாரம். அவனன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள், அணுவளவும் அதிகாரம் படைத்தவர்களல்லர். நீங்கள் அவர்களை அழைத்தால் உங்கள் அழைப்பை அவர்கள் செவியுற மாட்டார்கள். செவியேற்றார்கள் என்று வைத்துக் கொண்டாலும் உங்களுக்குப் பதில் தர மாட்டார்கள். கியாமத் நாளில் நீங்கள் இணை கற்பித்ததை அவர்கள் மறுத்து விடுவார்கள். நன்கறிந்தவனைப் போல் உமக்கு எவரும் அறிவிக்க முடியாது.

(அல்குர்ஆன் 35 :13,14)

எதையும் படைக்காதவற்றையா அவர்கள் (இறைவனுக்கு) இணை கற்பிக்கின்றனர்? அவர்களே படைக்கப்படுகின்றனர். இவர்களுக்கு உதவிட அவர்களுக்கு இயலாது. தமக்கே கூட அவர்கள் உதவிக் கொள்ள மாட்டார்கள். (எதையும்) தெரிவிக்க அவர்களை நீங்கள் அழைத்தால் அவர்கள் உங்களைப் பின்பற்ற மாட்டார்கள். நீங்கள் அவர்களை அழைப்பதும், மௌனமாக இருப்பதும் உங்களைப் பொறுத்த வரை சமமானது. அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களைப் போன்ற அடிமைகளே. நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அவர்களை அழைத்துப் பாருங்கள்! அவர்கள் உங்களுக்குப் பதில் தரட்டும்!

(அல்குர்ஆன் 7 : 191, 192, 193, 194)

அவனையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களுக்கு உதவிட இயலாது. தமக்கே அவர்கள் உதவ முடியாது.

(அல்குர்ஆன் 7 : 197)

மனிதர்களே! உங்களுக்கு ஓர் உதாரணம் கூறப்படுகிறது. அதைச் செவிதாழ்த்திக் கேளுங்கள்! அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் அனைவரும் ஒன்று திரண்டாலும் ஓர் ஈயைக் கூட படைக்க முடியாது. ஈ அவர்களிடமிருந்து எதையேனும் பறித்துக் கொண்டால் அதை அந்த ஈயிடமிருந்து அவர்களால் மீட்க முடியாது. தேடுவோனும், தேடப்படுவோனும் பலவீனமாக இருக்கிறார்கள்.

(அல்குர்ஆன் 22 : 73)

வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்டால் அல்லாஹ் என்று கூறுவார்கள். அல்லாஹ்வையன்றி நீங்கள் பிரார்த்திப்பவற்றைப் பற்றிக் கூறுங்கள்! என்று கேட்பீராக! அல்லாஹ் எனக்கு ஒரு தீங்கை நாடி விட்டால் அவனது தீங்கை அவர்கள் நீக்கி விடுவார்களா? அல்லது அவன் எனக்கு அருளை நாடினால் அவர்கள் அவனது அருளைத் தடுக்கக் கூடியவர்களா? அல்லாஹ் எனக்குப் போதும். சார்ந்திருப்போர் அவனையே சார்ந்திருப்பார்கள் என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 39 :38)

அல்லாஹ்வையன்றி யாரை அழைக்கிறார்களோ அவர்கள் எதையும் படைக்க மாட்டார்கள். அவர்களே படைக்கப்படுகின்றனர். அவர்கள் இறந்தவர்கள்; உயிருடன் இருப்போர் அல்லர். எப்போது உயிர்ப்பிக்கப்படுவார்கள் என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 16 : 20,21)

மவ்லிது அபிமானிகள் நாம் கேட்க விரும்புவது இது தான். அல்லாஹ்வுடைய இந்த வசனங்களை நீங்கள் நம்பப் போகிறீர்களா? இதற்கு முரணாக அமைந்த மனிதக் கற்பனையில் உருவான மவ்லிதை நம்பப் போகிறீர்களா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உட்பட எவருக்கும் எந்த அதிகாரமும் இல்லை. அவர்களும் அல்லாஹ்வின் அடிமைகளே. இறந்தவர்கள். எதையும் அவர்களால் செய்ய முடியாது என்பதையெல்லாம் இந்த வசனங்கள் மிகத் தெளிவாக இரண்டாவது கருத்துக்கு இடமின்றி அறிவிக்கின்றன. இதற்கு நேர் எதிராக அமைந்த மவ்லிதை உண்மை முஸ்லிம்கள் எப்படி அங்கீகரிக்க முடியும்.

## 11 ஜின்களையும், மனிதர்களையும் இரட்சிக்கக் கூடியவர்!

**انت غوث الثقلين *انت زين الحرمين**

**ومنير الملوين *اجعلنا مقبلينا**

ஜின்கள், மனிதர்கள் ஆகிய இரு இனத்தவர்களையும் இரட்சிக்கக் கூடியவர் நீங்களே! மக்கா, மதீனா ஆகிய புனித நகரங்களுக்கு அலங்காரமாகத் திகழ்பவர் நீங்களே! வானம், பூமிகளைப் பிரகாசிக்கச் செய்பவர் நீங்களே! எங்களை வெற்றி பெற்றவர்களாக ஆக்கி விடுங்கள்!

முட்டாள்தனமான இந்த வரிகளைக் கண்ட பின்பும் யாரேனும் இதை ஆதரிக்க முடியுமா? மனித இனத்தை மட்டுமின்றி ஜின்களையும் இவர் தாம் இரட்சிப்பாராம்! வானம் பூமியை இவர் தாம் பிரகாசிக்கச் செய்கிறாராம்! இது நாம் மேலே எடுத்துக் காட்டிய குர்ஆன் வசனங்களுடன் நேரடியாக மோதுவதை எவரும் அறிந்து கொள்ளலாம்.

**انت اتقى الاتقياء *انت اصفى الاصفياء**

**صرت تاج الاولياء *آتنا فتحا مبينا**

இறையச்சமுடையவர்களிலெல்லாம் அதிக இறையச்சமுடையவர் நீங்களே! சிறந்தவர்களிலெல்லாம் மிகச் சிறந்தவர் நீங்களே! இறை நேசர்களின் கிரீடமாக நீங்கள் மாறி விட்டீர்கள். எங்களுக்குத் தெளிவான வெற்றியை வழங்குங்கள்!

இறையச்சம் என்பது உள்ளத்தின் பாற்பட்ட ஒன்று. யாருக்கு இறையச்சம் உள்ளது? எந்த அளவுக்கு இது உள்ளது? என்பதையெல்லாம் இறைவன் மட்டுமே அறிவான் என்ற சாதாரண உண்மைக்கு மாற்றமாக அப்துல் காதிர் ஜீலானியின் இறையச்சத்துக்கு நற்சான்று வழங்குகின்றது இந்தக் கவிதை.

நபிமார்களை விடவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விடவும் அப்துல் காதிர் ஜீலானி அதிக இறையச்சமுடையவர் என்ற கருத்தையும் இந்தக் கதை தருகின்றது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மதிக்கின்ற எந்த முஸ்லிமாவது இதை ஒப்புக் கொள்ள முடியுமா? மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும். தெளிவான வெற்றியை வழங்குமாறு அப்துல் காதிர் ஜீலானியிடம்

பிரார்த்திக்கப்படுகின்றது. வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் அதிகாரத்தை இவருக்கு வழங்கியவன் யார்? நபிகள் நாயகம் (ஸல்) கூட பல சந்தர்ப்பங்களில் தோற்றுள்ளனர்.

என்று இறைவன் கூறுவதன் மூலம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கூட இந்த அதிகாரத்தை தான் வழங்கவில்லை என்று இறைவன் கூறும் இந்த வசனத்துடனும், மேலே நாம் எடுத்துக் காட்டிய வசனங்களுடனும் இந்தக் கவிதை நேரடியாக மோதுகின்றது.

**انت مبدع النوادر *مظهر ما فی الضمائر**

**مخبر ما فی السرائر *رحمة دنيا ودينا**

அரிதான அற்புதமான நிகழ்ச்சியை நிகழ்த்தக் கூடியவர் நீங்களே. பிறரது உள்ளங்களில் உள்ளவற்றை வெளிப்படையாக அறிவிக்கக் கூடியவர் நீங்களே.

மறைவான செய்திகளை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய முடியாது என்பதை தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளோம். அதற்கு முரணாக இந்தக் கவிதை அமைந்துள்ளது.

**كن لنا حرزا كنينا *كن لنا كهفا منيعا**

**عن بليات شفيعا *فی خطيات وسيعا**

**من عطيات تفينا**

எங்களுக்குப் பாதுகாப்பு அரணாக ஆகி விடுங்கள். எங்களுக்கு துன்பங்களைத் தடுக்கும் குகையாக ஆகி விடுங்கள். தவறுகளுக்காகப் பரிந்துரை செய்யுங்கள். நீங்கள் எங்களுக்கு வழங்கக்கூடிய அருட்கொடைகளில் தாரளமாக நடந்து கொள்ளுங்கள்!

எல்லா அதிகாரங்களும் அப்துல் காதிர் ஜீலானியிடம் குவிந்து கிடப்பதாக முஹ்யித்தீன் மவ்லிதின் பாடல்கள் கூறுகின்றன. அல்லாஹ்விடம் எந்த அதிகாரமும் இல்லை. அல்லாஹ் என்று ஒருவன் தேவையில்லை என்ற அளவுக்கு அப்துல் காதிரே அல்லாஹ்வாக்கப்படுகின்றார்.

இத்தகைய நச்சுக் கருத்துக்களைத் தான் பொருள் தெரியாமல் வணக்கமாகக் கருதி இந்தச் சமுதாயம் பாடிக் கொண்டிருக்கின்றது. இதைப் படிப்பதால், இதை நம்புவதால் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாக நேருமா? அல்லாஹ் அருள் கிடைக்குமா? நடுநிலையுடன் மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும்.

பொதுவாக மவ்லிதுகளும் குறிப்பாக முஹ்யித்தீன் மவ்லிதும் திருக்குர்ஆனுடனும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிகாட்டுதலுடனும் நேரடியாக மோதும் வகையில் அமைந்துள்ளன. அதைத் தெளிவான சான்றுகளுடன் நாம் அறிந்தோம். இது போன்ற நச்சுக் கருத்தைக் கொண்ட முஹ்யித்தீன் மவ்லிதின் மற்றொரு வரியைப் பாருங்கள்.

**وهوالذي من كان نادى باسمه *فى شدة ينجو بغير تنجم**

**بل انه لم قط يفعل فعله *الا باذن الهه المتكلم**

அவர் (அப்துல் காதிர் ஜீலானி) எத்தகையவர் என்றால் யாரேனும் கஷ்டத்தின் போது அவரை அழைத்தால் அவர் உடனடியாக ஈடேற்றம் பெறுவார்.

பல நூறு ஆண்டுகளுக்கு முன் மரணித்து விட்ட ஒருவரை அழைத்தால் அவர் ஈடேற்றம் அளிப்பார் என்பதும், அவரை அழைக்கலாம் என்பதும் இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளையே தகர்க்கக் கூடியவையாகும். இறைவன் அல்லாதவர்களை அழைப்பது பற்றி திருக்ககுர்ஆன் கூறுவதைக் கவனியுங்கள்.

எதையும் படைக்காதவற்றையா அவர்கள் (இறைவனுக்கு) இணை கற்பிக்கின்றனர்? அவர்களே படைக்கப்படுகின்றனர். இவர்களுக்கு உதவிட அவர்களுக்கு இயலாது. தமக்கே கூட அவர்கள் உதவிக் கொள்ள மாட்டார்கள். (எதையும்) தெவிக்க அவர்களை நீங்கள் அழைத்தால் அவர்கள் உங்களைப் பின்பற்ற மாட்டார்கள். நீங்கள் அவர்களை அழைப்பதும், மௌனமாக இருப்பதும் உங்களைப் பொறுத்த வரை சமமானது. அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களைப் போன்ற அடிமைகளே. நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அவர்களை அழைத்துப் பாருங்கள்! அவர்கள் உங்களுக்குப் பதில் தரட்டும்!

(அல்குர்ஆன் 7:191, 194)

அல்லாஹ்வை விடுத்து நல்லடியார்களையும், மகான்களையும் அழைத்துப் பிரார்த்தித்து வந்த மக்களிடம் தான் அவர்களும் உங்களைப் போன்ற அடிமைகளே என்று இறைவன் கூறுகிறான்.

எத்தனைப் பெரிய மனிதர் என்றாலும் அவர்கள் இறைவனுக்கு அடிமைகள் தாம் என்பதையும அடிமைகளிடம் பிரார்த்திக்க முடியாது என்பதையும் இவ்வசனத்தில் அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

மனிதர்களே! உங்களுக்கு ஓர் உதாரணம் கூறப்படுகிறது. அதைச் செவிதாழ்த்திக் கேளுங்கள்! அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் அனைவரும் ஒன்று திரண்டாலும் ஓர் ஈயைக் கூட படைக்க முடியாது. ஈ அவர்களிடமிருந்து எதையேனும் பறித்துக் கொண்டால் அதை அந்த ஈயிடமிருந்து அவர்களால் மீட்க முடியாது. தேடுவோனும், தேடப்படுவோனும் பலவீனமாக இருக்கிறார்கள்.

(அல்குர்ஆன் 22:73)

அழைத்துப் பிரார்த்தனை செய்யப்படுபவர் படைக்கக் கூடியவராக இருக்க வேண்டும். அப்துல் காதிர் ஜீலானி உட்பட யாராக இருந்தாலும் ஈயைக் கூட அவர்களால் படைக்க முடியாது என்று இவ்வசனத்தில் அல்லாஹ் சொல்லித் தருகிறான்.

அவனே அல்லாஹ்; உங்கள் இறைவன். அவனுக்கே அதிகாரம். அவனன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள், அணுவளவும் அதிகாரம் படைத்தவர்களல்லர். நீங்கள் அவர்களை அழைத்தால் உங்கள் அழைப்பை அவர்கள் செவியுற மாட்டார்கள். செவியேற்றார்கள் என்று வைத்துக் கொண்டாலும் உங்களுக்குப் பதில் தர மாட்டார்கள். கியாமத் நாளில் நீங்கள் இணை கற்பித்ததை அவர்கள் மறுத்து விடுவார்கள். நன்கறிந்தவனைப் போல் உமக்கு எவரும் அறிவிக்க முடியாது. மனிதர்களே! நீங்கள் அல்லாஹ்விடம் தேவையுடையவர்கள். அல்லாஹ்வே தேவையற்றவன்; புகழுக்குரியவன்.

(அல்குர்ஆன் 35:13,14,15)

அப்துல் காதிர் ஜீலானி உட்பட எந்த மனிதராக அல்லாஹ்விடம் தேவையாகக் கூடியவர்கள் தாம். தேவையாகக் கூடியவர்களிடம் பிரார்த்திக்க முடியாது என்பதற்காகவே இங்கே இதை இறைவன் கூறுகிறான். மேலும் இறந்தவர்கள் எந்தப் பிரார்த்தனையையும் செவியேற்கும் நிலையில் இல்லை எனவும் கூறுகிறான்.

கியாமத் நாள் வரை தமக்குப் பதில் தராத, அல்லாஹ் அல்லாதோரை அழைப்பவரை விட மிகவும் வழி கெட்டவர் யார்? அவர்களோ தம்மை அழைப்பது பற்றி அறியாது உள்ளனர்.

(அல்குர்ஆன் 46:5)

அல்லாஹ்வை விடுத்து எவரையும் அழைக்க முடியாது. அழைப்பதை அவர்கள் செவியுற முடியாது. அழைப்பதை அறியவும் முடியாது. அணுவளவு அதிகாரமும் அவர்களுக்குக் கிடையாது என்றெல்லாம் தெளிவாகப் பிரகடனம் செய்யும் இவ்வசனங்களுடன் இந்த மவ்லிது வரி நேரடியாக மோதுவதை மவ்லிது அபிமானிகள் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் வாழ்ந்த காபிர்கள் சாதாரண நேரத்தில் அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்தித்து வந்தனர். ஆனால் அவர்களுக்குத் தாங்க முடியாத பெருந்துன்பம் ஏற்பட்டால் அல்லாஹ்விடம் மட்டுமே பிரார்த்தனை செய்து வந்தனர். கஷ்டமான நேரத்தில் அவரை அழைத்தால் ஈடேற்றம் பெறுவார் என்ற வரிகள் மக்கத்துக் காபிர்களின் கொள்கையை விட மோசமான கொள்கைக்கு அழைப்பதை மவ்லிது அபிமானிகள் சிந்திக்க வேண்டும்.

இதோ மக்கத்துக்குக் காபிர்கள் குறித்து அல்லாஹ் கூறுகிறான்.

முகடுகளைப் போல் அலைகள் அவர்களை மூடும் போது உளத்தூய்மையுடன் வணக்கத்தை உரித்தாக்கி அவனைப் பிரார்த்திக்கின்றனர். அவர்களைக் காப்பாற்றித் தரையில் சேர்த்ததும் அவர்களில் நேர்மையாக நடப்பவரும் உள்ளனர்.

நன்றி கெட்ட சதிகாரர்களைத் தவிர வேறு எவரும் நமது சான்றுகளை நிராகரிப்பதில்லை.

(அல்குர்ஆன் 31:32)

உங்களிடம் அல்லாஹ்வின் வேதனை வந்தால் அல்லது அந்த நேரம் வந்து விட்டால் அல்லாஹ் அல்லாதவர்களையா அழைக்கிறீர்கள்? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் பதில் சொல்லுங்கள்! என்று கேட்பீராக! மாறாக அவனையே அழைக்கிறீர்கள். நீங்கள் இணை கற்பித்தவர்களை மறந்து விடுகிறீர்கள். அவன் நாடினால் அவனை எதற்காக அழைத்தீர்களோ அதை நீக்கி விடுகிறான்.

(அல்குர்ஆன் 6:40,41)

கடுமையான துன்பங்கள் ஏற்படும் போது மட்டுமாவது மக்கத்துக் காபிர்கள் ஏக இறைவனை மட்டும் நம்பி வந்துள்ளனர் என்பதற்கு இவ்வசனங்கள் தெளிவான சான்றுகளாகும். இதே கருத்தை 39.8, 10.12, 39.49, 27.62, 7.189, ஆகிய வசனங்களும் கூறுகின்றன.

மக்கத்துக் காபிர்களின் கொள்கையை விட மோசமான கொள்கையை முஸ்லிம்களிடம் திணிக்கக் கூடிய இந்த மவ்லிதை முஸ்லிம்கள் ஆதரிக்க முடியுமா? இதைப் படிப்பதால் அல்லாஹ்விடம் நன்மை கிடைக்குமா? இஸ்லாத்தைப் பற்றி சிறிதளவு கூட அறியாத மூடர்களால் எழுதப்பட்ட இந்த மவ்லிதுக்காக நமது ஈமானை இழந்து விடலாமா?

இந்த மவ்லிதில் உள்ள இன்னும் பல அபத்தமான பாடல்களைப் பாருங்கள்.

யார் தமது தேவைகளுக்காக அவரை (அப்துல் காதிர் ஜீலானியை) வஸீலாவாக ஆக்கிக் கொள்வார்களோ அவர்களின் தேவைகள் குல்சும் கடலளவு இருந்தாலும் நிறைவேற்றப்படும்.

இஸ்லாத்திற்குள் இணை வைக்கும் கொள்கையை உருவாக்கியவர்கள் அதை நியாயப்படுத்துவதற்காக வஸீலா எனும் ஆயுதத்தைக் கையில் எடுப்பது வழக்கம். வஸீலா தேடுமாறு அல்லாஹ்வே கட்டளையிட்டுள்ளான். நாங்கள்

அவ்லியாக்களை வஸீலாவாகத் தான் பயன்படுத்துகிறோம். எனவே இது இணை வைத்தலில் சேராது என்று வாதிடுகின்றனர்.

இறந்து போனவர்களிடம் பிரார்த்திப்பதும் இன்னாரின் பொருட்டால் இதைத் தா என்று இறைவனிடம் கேட்பதும் தான் வஸீலா என்று மக்களை ஏமாற்றி வருகின்றனர். எனவே வஸீலா பற்றி அறிந்து கொண்டால் தான் இந்த வரிகளில் உள்ள அபத்தத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

வஸீலா தேடுமாறு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளது உண்மை தான். அதில் எந்தச் சந்தேகமும் இல்லை. அல்லாஹ்விடம் கண்டிப்பாக வஸீலா தேட வேண்டும் என்பதிலும் இரண்டாவது கருத்துக்கு இடமில்லை. வஸீலாவை மறுப்பவன் அல்லாஹ்வின் வேதத்தையே மறுத்தவனாவான் என்பதிலும் மாற்றுக் கருத்துக்கு இடமில்லை.

வஸீலாவுக்கு இவர்கள் தரும் விளக்கத்தில் தான் நமக்கு ஆட்சேபனை உள்ளது.

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! அவனை நோக்கி ஒரு வஸீலாவைத் தேடிக் கொள்ளுங்கள்! அவன் பாதையில் அறப்போர் செய்யுங்கள்! வெற்றி பெறுவீர்கள். நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! அவனை நோக்கி ஒரு வஸீலாவைத் தேடிக் கொள்ளுங்கள்! அவன் பாதையில் அறப்போர் செய்யுங்கள்! வெற்றி பெறுவீர்கள்.

(அல்குர்ஆன் 5.35)

இது தான் வஸீலா தேடுமாறு கட்டளையிடும் வசனம். இன்னாரின் பொருட்டால் இதைத் தா என்று பிரார்த்திப்பது தான் வஸீலாவாகும் என்ற கூற்று எவ்வளவு அபத்தமானது என்பதை அறிந்து வஸீலாவின் சரியான பொருள் என்ன என்பதை அறிவோம்.

இந்த வசனத்தில் நம்பிக்கை கொண்டவர்களே என்று இறைவன் அழைக்கிறான். இந்த அழைப்பில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலிருந்து இன்று வரை இனி உலகம் அழியும் வரை உள்ள அத்தனை மூஃமீன்களும் அடங்குவார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தான் இந்த

அழைப்பில் முதலில் அடங்குவார்கள். இதைக் கவனத்தில் வைத்துக் கொண்டு இந்த வசனத்தை ஆராய்வோம்.

மூஃமின்களே என்று இறைவன் அழைத்துவிட்டு அவர்கள் செய்ய வேண்டிய சில கடமைகளை இவ்வசனத்தில் கூறுகிறான். அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள் என்று ஆரம்பமாகக் கூறுகிறான். அல்லாஹ்வை அஞ்சுகின்ற இந்தக் கடமையை அனைத்து முஸலிம்களும் நிறைவேற்றியாக வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மற்றவர்களை விட அதிகம் அல்லாஹ்வுக்கு அஞ்ச வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அல்லாஹ்வை அவ்வாறே அதிகம் அஞ்சினார்கள்.

இந்தக் கட்டளையில் யாருக்கும் எந்த விதிவிலக்கும் இல்லை. எந்த மூஃமினும் அல்லாஹ்வை அஞ்சாதிருப்பதற்கு அனுமதிக்கப்பட்டவரல்லர்.

அடுத்ததாக அல்லாஹ்விடம் வஸீலாவைத் தேடுங்கள் என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான். அல்லாஹ்விடம் வஸீலாத் தேடும் இந்தக் கடமையையும் அனைத்து மூஃமின்களும் நிறைவேற்றியாக வேண்டும். மற்றவர்களை விட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் பால் அதிகமதிகம் வஸீலாத் தேடியாக வேண்டும். இன்னொருவரின் பொருட்டால் இதைத் தா என்று இறைவனிடம் கேட்பது தான் வஸீலா என்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் யார் பொருட்டால் தமது தேவைகளைக் கேட்டார்கள்? யார் பொருட்டாலும் அவர்கள் கேட்கவில்லை என்றால் வஸீலாத் தேடுங்கள் என்ற கட்டளையை அவர்கள் மீறி விட்டார்களா?

இந்தப் பெரியாரின் பொருட்டால் இதைத் தா என்று கேட்கின்றனர். இதன் மூலம் வஸீலாத் தேடுங்கள் என்ற கட்டளையை நிறைவேற்றி விட்டதாக நம்புகின்றனர். எந்தப் பெரியாரும் மூஃமின்களில் ஒருவர் தாமே அவரும் கூட வஸீலாத் தேட வேண்டுமே? அவர் யார் பொருட்டால் தேடினார்? இதைச் சிந்தித்தால் வஸீலாவுக்கு இவர்கள் கூறும் விளக்கம் அபத்தமானது என்பதை அறியலாம்.

இவர்கள் யாரிடம் பிரார்த்திக்கிறார்களோ அவர்களில் (இறைவனுக்கு) மிகவும் நெருக்கமானவர்களே. தமது இறைவனை நோக்கி வஸீலாவைத் தேடுகின்றனர். அவனது அருளை எதிர்பார்க்கின்றனர். அவனது வேதனைக்கு அஞ்சுகின்றனர். உமது இறைவனின் வேதனை அச்சப்பட வேண்டியதாகும்.

(அல்குர்ஆன் 17:57)

சாதாரண மக்கள் அல்லாஹ்வின் பால் வஸீலாத் தேடுகிறார்களோ இல்லையோ அல்லாஹ்வுக்கு மிக நெருக்கமான அடியார்கள் நிச்சயமாக அல்லாஹ்வின் பால் வஸீலாத் தேடிக்கொண்டிருக்கின்றனர் என்பதை இவ்வசனம் கூறுகிறது.

எல்லா மூஃமீன்களும் குறிப்பாக நல்லடியார்களும் அதிலும் குறிப்பாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் தேடக்கூடிய வஸீலா என்பது எது? நிச்சயமாக இவர்கள் கூறக்கூடிய வஸீலா அன்று.

அப்படியானால் வஸீலாவின் விளக்கம் என்ன? வஸீலா எனும் வார்த்தைக்கு நெருக்கம். நெருங்குவதற்கான சாதனம். நெருங்குவதற்கான வழி என்று அரபு அகராதியில் பொருள் கூறப்படுகின்றது.

அல்லாஹ்வின் பால் வஸீலாவைத் தேடுங்கள் என்றால் அல்லாஹ்வின் பால் நெருங்குவதற்கான வழியைத் தேடுங்கள் என்பதாகும்.

இந்தப் பொருளில் மேற்கண்ட இரு வசனங்களுக்கும் பொருள் செய்து பாருங்கள். மூஃமீன்களே அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். அவன் பால் நெருங்குவதற்கான (வஸீலாவை) வழியைத் தேடிக் கொள்ளுங்கள். இப்படிப் பொருள் கொள்ளும் போது இந்தக் கட்டளை முழுமையாக அனைவராலும் நிறைவேற்றப்படத்தக்கதாக அமைகின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அல்லாஹ்வை அஞ்சினார்கள். அவன் பால் நெருங்குவதற்கான வழியைத் தேடினார்கள். நல்லடியார்களும் தேடினார்கள்.

வஸீலா என்பதன் பொருள் இறைவனை நெருங்குவதற்காக இறைவன் நமக்குக் கற்றுத் தந்துள்ள தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ், மற்றுமுள்ள

வணக்க வழிபாடுகளே. அந்த வணக்க வழிபாடுகள் மூலமாக இறைவனின் நெருக்கத்தைத் தேட வேண்டும். அதையே வஸீலா பற்றிக் கூறும் வசனங்கள் கூறுகின்றன. அகராதியில் கூறப்பட்ட பொருளுக்கு இது தான் பொருத்தமாக உள்ளது.

மேலும் இவ்வாறு பொருள் கொள்வது தான் அறிவுக்கு ஏற்றதாக உள்ளது. எப்படியென்று பார்ப்போம்.

ஒரு முதலாளியிடம் நாம் சம்பளத்திற்கு வேலை செய்கிறோம். அவரது கட்டளைகளைச் சரியாக சிறப்பாக நிறைவேற்றிவிட்டு அவரிடம் சென்று ஐயா நீங்கள் கூறிய வேலைகளைச் சிறப்பாகச் செய்து முடித்து விட்டேன். எனக்கு இதைத் தாருங்கள். அதைத் தாருங்கள் என்று கேட்கிறோம். அவர் மகிழ்ந்து நாம் கேட்டதைத் தருவார்.

அந்த முதலாளியிடம் நம்மைப் போல் மற்றும் சிலர் பணியாற்றுகின்றனர். அவர்கள் நம்மை விடச் சிறப்பாகவும் பணி புரிகின்றனர். நாம் அந்த முதலாளியிடம் சென்று ஐயா நீங்கள் கூறிய பணிகளை இவர்கள் சிறப்பாகச் செய்துள்ளனர். எனவே எனக்கு இதைத் தாருங்கள். அதைத் தாருங்கள் என்று கேட்கிறோம். இவ்வாறு நாம் கூறுவதைக் கேட்டால் நாம் சுய நினைவுடன் தான் கூறுகிறோமா என்ற ஐயம் கொள்வார். அவர்கள் சிறப்பாகப் பணியாற்றியதற்காக உனக்கேன் நான் எதையும் தர வேண்டும்? என்று கேட்பார். இந்த நிலையில் இன்னாரின் பொருட்டால் இதைத் தா என்று வஸீலாவுக்குப் பொருள் கொள்ளக்கூடிய நிலையும் உள்ளது.

இறைவா உனது கட்டளைகளைச் சரியாக நிறைவேற்றினேன். அதற்காக இதைத் தா என்று கேட்டால் அர்த்தமிருக்கிறது. இவ்வாறு கேட்பதை விடுத்து. இறைவா இந்த நல்லடியார் உனது கடமைகளைச் சரியாக நிறைவேற்றியதால் எனக்கு இதைத் தா என்று கேட்பதில் ஏதேனும் அர்த்தமள்ளதா? அவர்கள் எனது கடமைகளைச் செய்தால் அவர்களுக்கு நான் கொடுப்பேன். அவர்கள் எனது கடமைகளைச் செய்வதற்காக உனக்கு நான் ஏன் தர வேண்டும்? என்றெல்லாம் இறைவன் கேட்க மாட்டானா? சாதாரண மனிதர்களுக்கு விளங்கக்கூடிய

நியாயம் இறைவனுக்கு விளங்காது என்று இவர்கள் நினைக்கிறார்களா? இந்த அர்த்தமற்ற உளறலில் உள்ள அபத்தத்தைப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் தான் இறைவன் இருக்கின்றானா? இதைச் சிந்திப்பவர்கள் வஸீலாவின் சரியான பொருள் என்னவென்பதை உணர்வார்கள்.

முஹம்மதின் பொருட்டால் எனது பாவத்தை மன்னிப்பாயாக என்று ஆதம் (அலை) அவர்கள் கூறியுள்ளார்களே என்று சிலர் கேட்கலாம். இந்தச் செய்தி ஆதாரமற்றதும், இட்டுக்கட்டப்பட்டதுமாகும். இந்தச் செய்தி பல்வேறு நூல்களிலும் இடம் பெற்றிருந்தாலும் அப்துர் ரஹ்மான் பின் ஸைத் பின் அஸ்லம் என்பார் வழியாகவே அனைத்து நூல்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவர் தமது தந்தை வழியாக ஏராளமான இட்டுக்கட்டப்பட்ட செய்திகளை அறிவித்தவர் என்று ஹதீஸ் கலை அறிஞர்கள் கூறுகின்றனர். எனவே இந்தச் செய்தியை ஆதாரமாக எடுத்துக் கொள்ள முடியாது.

மேலும் ஆதம் (அலை) அவர்கள் எவ்வாறு எந்த வார்த்தைகளைக் கூறி பாவமன்னிப்புத் தேடினார்கள் என்று திருக்குர்ஆன் விளக்கமாகக் கூறுகின்றது.. அதற்கு முரணாகவும் இந்தச் செய்தி அமைந்துள்ளது. (பாவ மன்னிப்புக்குய) சில வார்த்தைகளை இறைவனிடமிருந்து ஆதம் பெற்றுக் கொண்டார். எனவே அவரை இறைவன் மன்னித்தான்; அவன் மன்னிப்பை ஏற்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

(அல்குர்ஆன் 2:37)

பாவம் செய்த ஆதம் (அலை) அதற்காக எவ்வாறு மன்னிப்புக் கேட்பது என்ற வழியைச் சுயமாக அறிந்து கொள்ளவில்லை. அந்த வழியையும் அதற்குரிய வார்த்தைகளையும் இறைவனே கற்றுக் கொடுத்தான். அந்த வார்த்தைகளைக் கூறி அவர் மன்னிப்புக் கேட்டதால் அவர் மன்னிக்கப்பட்டார் என்று இவ்வசனம் கூறுகின்றது.

இறைவன் அவருக்கு கற்றுக் கொடுத்த வார்த்தைகள் என்ன, அதையும் திருக்குர்ஆன் வேறொரு இடத்தில் கூறுகிறது.

எங்கள் இறைவா! எங்களுக்கே தீங்கு இழைத்து விட்டோம். நீ எங்களை மன்னித்து, அருள் புரியவில்லையானால் நஷ்டமடைந்தோராவோம் என்று அவ்விருவரும் கூறினர்.

(அல்குர்ஆன் 7:23)

தங்களது பாவத்தையும் இறைவனது கருணையையும், வல்லமையையும் ஒரே நேரத்தில் நினைவு கூர்ந்து, தங்கள் தவறைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டு தங்களுக்கு வேறு நாதியில்லை என்பதையும் உணர்ந்து கொண்டு இறைவனிடம் பிரார்த்தனை செய்தார்கள். இப்படித்தான் அவர்கள் மன்னிப்புக் கேட்டார்கள். தவிர முஹம்மத் பொருட்டால் என்று கேட்கவில்லை. அவ்வாறு கேட்டிருந்தால் அவ்வாறு இறைவன் கற்றுக் கொடுத்திருந்தால் அதை நிச்சயமாக இறைவன் கூறியிருப்பான்.

இந்த பிரார்த்தனையில் கூட ஆதம் (அலை) வஸீலா தேடியுள்ளனர். இறைவனின் முன்னால் சரணடைவதும் அவனது வல்லமையைக் கூறிப் புகழ்வதும் தனது இயலாமையை ஒப்புக் கொள்வதும் வஸீலா தான். இறைவனை நெருங்குவதற்கான வழி தான்.

இதனால் தான் அபூஹனீபா இமாம் உள்ளிட்ட பல்வேறு அறிஞர்கள், எவர் பொருட்டாலும் அல்லாஹ்விடம் கேட்கக் கூடாது. எவருக்காகவும் அல்லாஹ் எதையும் தர வேண்டுமென கட்டாயம் ஏதுமில்லை என்று கூறியுள்ளனர்.

இப்போது மவ்லிதுக்கு வருவோம். யார் அப்துல் காதிர் ஜீலானி பொருட்டால் பிரார்த்திக்கிறாரோ அவரது தேவைகள் நிறைவேற்றப்படும் என்று கூறப்படும் வரிகள் திருக்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் எதிரானதாகும் என்பதை விளங்கலாம்.

அப்துல் காதிர் ஜீலானியின் பொருட்டால் கேட்டால் அல்லாஹ் அதை ஏற்பான் என்றால் அதை அல்லாஹ் தான் கூற வேண்டும். இவர் பொருட்டால் கேட்டால் அல்லாஹ் தருவான் என்பதை இந்தப் பாட்டை எழுதியவர் எப்படி அறிந்து

கொண்டார்? அல்லாஹ்விடத்தில் மறுமையில் இந்தப் பெரியார் உண்மையில் நல்லடியாராகத் தான் இருப்பார் என்பதையாவது யாராலும் அறிய முடியுமா?

இது போன்ற அபத்தங்களை நம்பி வழிகேட்டில் செல்லாமல் இறைவன் தான் காப்பாற்ற வேண்டும்.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களின் பெயரால் இட்டுக்கட்டப்பட்ட பொய்களின் தொகுப்பே முஹ்யித்தீன் மவ்லிது என்பதை நிரூபிக்கும் மற்றொரு அபத்தத்தைப் பாருங்கள்.

**بل انه لم قط يفعل فعله *الا باذن الهه المتكلم**

**عهدا له ات لا يموت مريده *الا غلى ما تاب من مستاثم**

அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் தமது இறைவனின் அனுமதியின்றி ஒரு போதும் எந்தச் செயலையும் செய்ததில்லை. அவரது சீடராக இருப்பவர் தமது பாவத்துக்காக மன்னிப்புத் தேடாமல் மரணிக்க மாட்டார் என்பது (அல்லாஹ்) அவரிடம் செய்த உடன்படிக்கையாகும்.

மவ்லிதை உருவாக்கியவர்கள் அதை நியாயப்படுத்தக் கையாளும் மலிவான தந்திரத்தை இந்தக் கவிதை அம்பலப்படுத்துகின்றது.

அப்துல் காதிர் ஜீலானி அவர்களை அல்லாஹ்வுக்குச் சமமாக காட்டக்கூடிய கற்பனைக் கதைகளை உண்மையான மூஃமீன்கள் நம்ப மாட்டார்கள் என்பதை மவ்லிதை உருவாக்கியவர்கள் நன்றாக அறிவார்கள். ஏகத்துவத்தையே தகர்க்கக்கூடிய வகையில் மவ்லிதில் கூறப்படும் கதைகள் அமைந்துள்ளனவே என்று ஆட்சேபனை வரும் என்பதையும் நன்றாக அறிவார்கள். அத்தகைய ஆட்சேபனைகளைத் தவிர்ப்பதற்காகத் தான் அப்துல் காதிர் ஜீலானி செய்த யாவுமே அல்லாஹ்வின் அனுமதியோடு தான் செய்யப்பட்டன. அவனுக்குப் போட்டியாகச் செய்யப்படவில்லை என்ற கருத்தை மேற்கண்ட கவிதையில் வலியுறுத்தியுள்ளார்கள். இப்படிச் செய்வதால் ஏகத்துவத்துக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாது என்பது அவர்களின் வாதம்.

அப்துல் காதிர் ஜீலானி அல்லாஹ்வின் அனுமதியோடு தான் அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான காரியங்களைச் செய்தார்கள் என்றால் அதற்கான ஆதாரங்கள் என்ன?

எவற்றை அல்லாஹ் தனக்கு மட்டுமே உரித்தானது என்று திருக்குர்ஆனில் உரிமை கொண்டாடுகின்றானோ அவற்றைச் செய்ய மற்றவர்களுக்கு எப்படி அனுமதியளிப்பான்?

அப்படியே அனுமதிப்பது என்றால் இறைவனுடன் வஹீ என்னும் தொடர்புடைய நபிமார்களுக்குத் தான் அனுமதிப்பான். அப்துல் காதிர் ஜீலானி அவர்களிடம் நேரடியாக பேசி அனுமதி தந்தானா? அல்லது வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அவர்களை அவரிடம் அனுப்பி அனுமதியளித்தானா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களோடு மார்க்கம் முடிந்து விட்டது என்பதன் பொருள் என்ன? நானே இறுதி நபி எனக்குப் பின் எந்த நபியும் இல்லை என்ற நபிமொழியின் பொருள் என்ன? இப்படி ஆயிரமாயிரம் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்குமே என்று அந்த அறிவீனர்கள் சிந்திக்கவில்லை.

அபத்தமான கருத்துக்களைக் கூறுவோர். அதை நியாயப்படுத்த முடியாத போது மதிப்பு மிக்க பெரியார் இவ்வாறு கூறினார் என்று கூறி அப்பாவிகளை வாயடைக்கச் செய்வதை நாம் பார்த்திருக்கிறோம். அல்லாஹ்வின் பெயரிலேயே இட்டுக்கட்டக் கூடியவரை ஜாஹிலிய்யாக் காலத்துக்குப் பின் இந்த மவ்லிதில் நாம் சந்திக்கிறோம்.

அவர்கள் வெட்கக்கேடான காரியத்தைச் செய்யும் போது எங்கள் முன்னோர்களை இப்படித் தான் கண்டோம். அல்லாஹ்வே இதை எங்களுக்குக் கட்டளையிட்டான் என்று கூறுகின்றனர். அல்லாஹ் வெட்கக் கேடானதை ஏவ மாட்டான். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டிக் கூறுகிறீர்களா? என்று கேட்பீராக!

(அல்குர்ஆன் 7.28)

மானக்கேடான காரியத்தைச் செய்துவிட்டு அல்லாஹ்வின் மீது பழி போட்டவர்களை அல்லாஹ் இங்கே எச்சரிக்கிறான். மானக்கேடுகளிலெல்லாம் மிகப் பெரிய மானக்கேடான ஷிர்க்கையே அல்லாஹ்வின் மீது பழிபோட்டு மவ்லிதை எழுதியவர் நியாயப்படுத்த முயல்கிறார். இந்த வசனம் இவருக்காகவே அருளப்பட்டது போல் இல்லையா? இதை மவ்லிது அபிமானிகள் சிந்திக்கட்டும்.

அதே வரியில் கூறப்படும் மற்றொரு அபத்தத்தைப் பாருங்கள். அப்துல் காதிர் ஜீலானியிடம் சீடராக இருந்தவர் பாவமன்னிப்புத் தேடாமல் மரணிக்க மாட்டார் என்று அல்லாஹ் உறுதிமொழி எடுத்தானாம்.

அகில உலகுக்கும் அருட்கொடையாக அனுப்பப்பட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கூட இத்தகைய உறுதி மொழியை அல்லாஹ் வழங்கவில்லை. அவர்களிடம் சீடராக இருந்தவர்களில் பலர் மறுமையில் எந்த நிலையில் இருப்பார்கள் என்பதைப் பின்வரும் ஹதீஸ்கள் தெளிவாக விளக்குகின்றன.

எனது சமுதாயத்தில் சிலர் இடப்புறமாகக் பிடிக்கப்படுவார்கள். அப்போது நான் என் தோழர்கள் என் தோழர்கள் என்று கூறுவேன். அதற்கு இறைவன் நீ அவர்களைப் பிரிந்தது முதல் அவர்கள் வந்த வழியே திரும்பிக் கொண்டிருந்தார்கள் எனக் கூறுவான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் புகாரி 3349, 3447

மற்றொரு அறிவிப்பில்

ஹவ்ல் அல் கவ்ஸர் தடாகத்திலிருந்து சில மக்கள் தடுக்கப்படுவார்கள். என் தோழர்கள் என் தோழர்கள் என்று நான் கூறுவேன். அப்போது முஹம்மதே உனக்குப் பின் இவர்கள் புதிதாக உருவாக்கியவைகளைப் பற்றி நீர் அறிய மாட்டீர் எனக் கூறப்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நூல்: புகாரி, 4625, 4740, 6526, 6576, 6582

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பைஅத் செய்த நல்லறத் தோழர்கள் கூட பாவமன்னிப்புப் பெற்றவர்களாக மரணிக்கவில்லை. அத்தகைய உத்தரவாதத்தைப் பெறவில்லை என்பதை இந்த ஹதீஸ்கள் தெளிவாக விளக்குகின்றன. பாவமன்னிப்புப் பெற்றிருந்தால் அவர்கள் இடப்புறமாகப் பிடிக்கப்பட மாட்டார்கள். அல்லாஹ்வின் தூதருடைய சீடர்களுக்கு வழங்காத உறுதிமொழியை அப்துல் காதிர் ஜீலானியுடைய சீடர்களுக்கு அல்லாஹ் வழங்கி விட்டான் என்று கூறும் இந்தக் கவிதையைப் படிக்கலாமா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை இழிவு படுத்தும் இத்தகைய கவிதைகளைத் தீயிலிட்டுப் பொசுக்க வேண்டாமா? நபிகள் நாயகத்தை உண்மையாகவே நேசிக்கக் கூடியவர்கள் சிந்திக்கட்டும்.

நானும் உங்களைப் போன்ற மனிதன் தான். நீங்கள் என்னிடம் வழக்குகளைக் கொண்டு வருகிறீர்கள். உங்களில் சிலர் மற்ற சிலரை விட தமது வாதத்தை அழகுற எடுத்து வைக்கக்கூடும். நான் கேட்கும் வாதத்தினடிப்டையில் அவருக்குச் சாதகமாக நான் தீர்ப்பளித்து விடுவேன். பிறரது உரிமையை ஒருவருக்குச் சாதகமாக நான் தீப்பளித்து விட்டால் அதைப் பெற்றுக் கொள்ளக் கூடாது. அவருக்காக நரகத்தின் ஒரு பகுதியை வழங்குகிறேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் உம்மு ஸலமா (ரலி)

நூல் புகாரி 2458, 2680, 6967, 7169, 7181, 7185

நபிகள் நாயகம் (ஸல்) காலத்தில் வாழ்ந்த மக்கள் மட்டுமே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வழக்குகளைக் கொண்டு வர முடியும். அவர்களைத் தமது வாதத் திறமையால் ஏமாற்றி தமக்குச் சாதகமான தீர்ப்பைப் பெற்று விட முடியும். ஆனால் மறுமையில் நரக நெருப்பை அடைவார் என்று இங்கே நபிகள் நாயகம் (ஸல்) எச்சரிக்கை செய்கிறார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழர்கள் என்ற காரணத்துக்காக செய்த பாவம் அனைத்துக்கும் மன்னிப்பை நபித் தோழர்கள் பெறவில்லை. பெறுவார்கள் என்ற உத்தரவாதமும் இல்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தளவாடங்களைப் பாதுகாக்கும் பொறுப்பில் கிர்கிரா என்பார் இருந்தார். அவர் மரணிக்கும் போது இவர் நரகிலிருப்பார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள் சென்று தேடிப்பார்த்த போது அவர் மோசடி செய்த ஒரு ஆடையைக் கண்டனர்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)

நூல்: புகாரி 3074

கைபர் போல் ஒருவர் மரணித்தார். இது பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அவருக்கு நீங்கள் தொழுகை நடத்துங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் உடனே மக்களின் முகங்கள் மாறுதலடைந்தன. அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உங்கள் தோழர் அல்லாஹ்வின் பாதையில் மோசடி செய்து விட்டார் என்றார்கள். அவரது பொருட்களை மக்கள் ஆராய்ந்தனர். அதில் யூதர்களுக்குச் சொந்தமான இரண்டு திர்ஹம் பெறுமதியில்லாத ஒரு மாலையைக் கண்டனர்.

அறிவிப்பவர்: யஸீத் பின் காலித் (ரலி)

நூல்கள்: அபூதாவூத் 2335 நஸயீ 1933,

ஒருவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நம்பிக்கைக்குrியவராக இருந்துள்ளார். மற்றொருவர் அல்லாஹ்வின் பாதையில் தம் உயிரை அர்ப்பணித்தவராக இருந்துள்ளார். ஆயினும் இவ்விருவரின் கடைசிச் செயல்களோ மோசடியாக இருந்துள்ளது. மன்னிப்புக் கேட்காமல் மரணிக்க மாட்டார் என்ற உத்தரவாதம் நபித்தோழர்களுக்கே கிடைக்கவில்லை. அதனால் தான் அவர் நரகில் இருப்பார் எனக் கூறினார்கள்.

இது போல் ஏராளமான ஹதீஸ்களை நாம் காணலாம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நேரில் பார்த்த நேரடியாக அவர்களிடம் பாடம் கற்ற தம் உயிரையும் அல்லாஹ்வின் பாதையில் அர்ப்பணிக்கத் தயாராக இருந்த நபித்தோழர்களே பாவ மன்னிப்புப் பெற்றவர்களாகத் தான் மரணிப்பார்கள் என்ற உத்தரவாதம்

இல்லை என்றால் அப்துல் காதிர் ஜீலானியின் சீடர்களுக்கு இத்தகைய உத்தரவாதம் உண்டு என்பதை ஏற்க முடியுமா?

கேடுகட்ட இந்த மவ்லிதுகளை இனியும் ஓதலாமா? ஆதரிக்கலாமா?

ஏராளமான திருக்குர்ஆன் வசனங்கள் எண்ணற்ற நபிமொழிகள் மற்றும் தர்க்க ரீதியான அறிவிப்பூர்வமான வாதங்கள் ஆகியவற்றின் துணையுடன் முஹ்யித்தீன் மவ்லிதின் அபத்தங்களை வெளிச்சம் போட்டுக் காட்டினோம்.

அப்துல் காதிர் ஜீலானியை அல்லாஹ்வுக்குச் சமமாக ஆக்கும் மேலும் சில வரிகளைப் பாருங்கள். இவை இஸ்லாத்திற்கு முரணானவை என்பதற்கு நாம் இதுவரை எடுத்துக் காட்டிய சான்றுகளே போதுமானதாகும்.

**يا قدوة الاخيار *اكشف لنا الاسرار**

கூஷி நல்லோர்களால் பின்பற்றப்படுபவரே இரகசியங்களை எங்களுக்குத் திறந்து காட்டுங்கள்.

தெளிவான மார்க்கத்தில் என்ன இரகசியம் உள்ளது? பல நூறு ஆண்டுகளுக்கு முன் மரணித்தவர் இதை எப்படித் திறந்து காட்டுவார்? அறிவுடையோரே சிந்தியுங்கள்.

**انتم غياث الناس *عن خطفة الخناس**

**بالحفظ للانفاس *فارفع لنا الاستار**

கூஷி ஆத்மாக்களை காப்பதன் மூலம் ஷைத்தானின் தாக்குதலை விட்டும் மக்களை இரட்சிப்பவர் நீங்களே எனவே எங்களுக்குத் திரைகளை விலக்குங்கள்.

ஆத்மாக்கள் அல்லாஹ்வின் கைவசம் உள்ளன. மற்றவர்களின் ஆத்மாக்களைக் காப்பது கிடக்கட்டும். தமது ஆத்மாவையே ஒருவரால் காத்துக் கொள்ள முடியாது. இது தான் இஸ்லாத்தின் அடிப்படை. உள்ளங்களைப் புரட்டக் கூடியவனே எனது உள்ளத்தை உனது மார்க்கத்தில் நிலைப்படுத்தி வை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதிகமதிகம் துஆச் செய்ததிலிருந்து இதை அறியலாம்.

**انا لك الغلمان *راجوك للاحسان**

கூறி நிச்சயமாக நாங்கள் உங்கள் அடிமைகள். பேருபகாரம் செய்ய உங்களை எதிர்பார்க்கிறோம்.

அல்லாஹ்வைத் தவிர யாருக்கும் யாரும் அடிமையாக இருக்க முடியாது என்ற இஸ்லாத்தின் அடிப்படை அப்பட்டமாகத் தகர்க்கப்படுகிறது. என்றோ மரணித்தவர் பேருபகாரம் செய்வார் என்று சித்தரிக்கப்படுகின்றது.

رزقا لنا الرضوان *رفقا بنا مختار

கூறி தேர்ந்தெடுக்கப்படுபவரே உங்கள் திருப்தியை எங்களுக்கு வழங்கி விடுங்கள். எங்களிடம் மென்மையாக நடந்து கொள்ளுங்கள்.

மரணித்துவிட்ட அப்துல் காதிர் இந்தக் கேடுகட்ட கவிஞன் மேல் ஏன் திருப்தியுற வேண்டும்? இப்படி ஒருவன் பிதற்றுவான் என்பதை அறிய முடியாத நிலையில் உள்ள அப்துல் காதிர் ஜிலானி எப்படி இவர் மீது திருப்தியுற முடியும்? அவர் திருப்தியுற்றால் என்ன? திருப்பதியுறாவிட்டால் என்ன? அவரது திருப்தியைப் பெற்றால் தான் மறுமையில் வெற்றி பெற முடியுமா? அப்துல் காதிர் ஜீலானி இந்தக் கவிஞனிடம் மென்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்றால் அப்துல் காதிர் ஜீலானி தான் நியாயத் தீர்ப்பு நாளின் அதிபதியா? இவர் மென்மையாக நடக்காவிட்டால் என்ன நேர்ந்துவிடும்? இப்படி ஏராளமான கேள்விகளை எழுப்பக் கூடிய அளவுக்கு அபத்தங்கள்.

بل نحن كالاشجار *انتم لها الامطار

கூறி நாங்கள் மரங்களைப் போன்றவர்கள். நீங்கள் மழை போன்றவர்.

மழையின்றி மரங்கள் வாழ முடியாதது போல் அப்துல் காதிர் ஜீலானியின்றி மக்கள் வாழ முடியாதாம். எல்லா அதிகாரமும் பெற்று இவர் விளங்கும் போது அல்லாஹ் என்று ஒருவன் எதற்காக?

ومسنا الحاجات *جئناك بالمزجات

فاوف كيل نجاة *لنا اولى الاعسار

கூறி எங்களுக்குத் தேவைகள் ஏற்பட்டுள்ளன. பைகளுடன் உங்களிடம் வந்து விட்டோம். வெற்றியை நிறைவாக சிரமப்படும் எங்களுக்கு அளந்து போடுங்கள்.

இப்படி அல்லாஹ்விடம் கேட்க வேண்டிய அனைத்தையும் இறந்தவர்களிடம் கேட்கிறார். அல்லாஹ்வின் அதிகாரங்களனைத்தையும் அப்துல் காதிருக்கு வழங்குகிறார்.

بشرى لمن قد زار *روض الولي البار
بالحفظ للاخطار *بل عن عذاب النار

கூஷி இந்த நல்ல இறைநேசரை ஸியாரத் செய்தவர்கள் துன்பங்களை விட்டும் நரகத்தின் வேதனையை விட்டும பாதுகாப்புப் பெறுவதற்காக நல்வாழ்த்துக்கள்.

அவரது கப்ரை ஸியாரத் செய்தவர்கள் எந்தத் துன்பமும் அடைய மாட்டார்கள் என்று யார் உத்தரவாதமளித்தது? அவரது கப்ரை ஸியாரத் செய்த ஏராளமானோர் துன்பத்தில் வீழ்ந்து கிடக்கின்றனரே? இதையெல்லாம் அறியாமல் இந்தக் கவிஞன் உளயிருக்கிறான்.

لولاه لا افلاح *للجن والابشار

கூஷி இவர் இல்லை என்றால் மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் எந்த வெற்றியும் கிடையாது.

என்று பிதற்றியுள்ளான். இவர் பிறப்பதற்கு முன் எத்தனையோ நபிமார்கள், அவர்கள் வழி நின்ற மூஃமின்கள் வெற்றி பெற்றுள்ளனர். இவர் மரணித்த பின்பும் எத்தனையோ நன்மக்கள் உலகில் தோன்றியுள்ளனர். இவரைப் பற்றி அறிந்திராத இவரது போதனைகளைப் படித்திராத எத்தனையோ மக்கள் நல்வழியில் செல்கின்றனர். இந்த உண்மைகளை உணராமல் இவரால் தான் மனித இனமும் ஜின்கள் இனமும் வெற்றியடைய முடியும் என்கிறான்.

இதன் மூலம் எல்லா நபிமார்களையும் நபித்தோழர்களையும் குறிப்பாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையும் அவமானப்படுத்துகிறான்.

هذا ذميم الحال *محمود ذو الاثقال
يرجو نداك البال *خذه عن الاخطار
احفظه من عاهات *واحرسه عن آفات
تقضي له الحاجات *تمحو له الاوزار

ادخله فى الاحزاب *واعدده فى الاصحاب

واقبله من احباب *يا عالي المقدار

கூஷி இதோ இழிந்த நிலையில் உள்ள பாவச் சுமைகளைச் சுமந்துள்ள மஹ்மூத் (லெப்பை) இருக்கிறேன். உயர்ந்த அந்தஸ்துடையவரே என்னை துன்பங்களிலிருந்து ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றுங்கள். எனது தேவைகளை நிறைவேற்றுங்கள். என் பாவங்களை அழித்து விடுங்கள். வெற்றி பெற்ற கூட்டத்தில் என்னைச் சேர்த்து விடுங்கள். தோழர்களில் ஒருவராக என்னைக் கணக்கிடுங்கள். நேசர்களில் ஒருவராக என்னை அங்கீகரித்துக் கொள்ளுங்கள்.

இதை எழுதிய மஹ்மூத் லெப்பை இதை எழுதிய ஒரே காரணத்துக்காக இழிந்த நிலையில் இருப்பதும் பாவ மூட்டைகளைச் சுமந்திருப்பதும் உண்மை. இந்த மவ்லிதில் உள்ள வரிகளில் இந்த வரி மட்டுமே நூறு சதவிகிதம் உண்மை. அதில் நமக்கு ஆட்சேபணை இல்லை.

அடுத்து தேவைகளை அப்துல் காதிர் ஜீலானி தான் நிறைவேற்ற வேண்டுமாம். பாவங்களை அவர் தான் அழிக்க வேண்டுமாம். நல்லோர் பட்டியலில் நபித்தோழர்கள் பட்டியலில் நேர்களின் பட்டியலில் அவர் தான் சேர்க்க வேண்டுமாம்.

இஸ்லாத்தின் அடிப்படையை ஓரளவுக்காவது அறிந்து வைத்திருக்கும் முஸ்லிம் சமுதாயமே! என்றோ மரணித்துவிட்ட ஒரு மனிதரை எல்லா வகையிலும் கடவுளாக்கி ஏகத்துவத்தைத் தரைமட்டமாக்கி நிரந்தர நரகத்திற்கு இட்டுச் செல்லும் இக்கவிதைகளைப் படிக்கலாமா? வீட்டில் வைத்திருக்கலாமா? சிந்தித்துப் பாருங்கள்.

பொருள் தெரியாத காலத்தில் ஏமாற்றப்பட்டவர்களை அல்லாஹ் நாடினால் மன்னித்துவிடக் கூடும். மவ்லிதின் பொருள் தெரிந்த பின் குர்ஆனுக்கும் நபிமொழிகளுக்கும் முரணாக அமைந்திருப்பது புரிந்த பின் இதை ஓதலாமா? அல்லாஹ் இந்தப் படுபாதகச் செயலை மன்னிப்பானா? இன்றே இப்போதே இதை விட்டொழிக்க வேண்டாமா?

இந்த மவ்லிதுகள் சிலரது வயிற்றுப் பிழைப்புக்காக முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டவை. கொடுக்கப்படும் கூலிக்காகவும், சுவையான உணவுக்காகவும் இவை ஓதப்படுகின்றன. இதைத் தவிர இதற்கு வேறு நோக்கம் இல்லை. முஹ்யித்தீன் மவ்லிதே இதை ஒப்புக் கொள்கிறது.

முஹ்யித்தீன் மவ்லிதின் பதினோறு பாடல்கள் உள்ளன, இவற்றில் பத்துப் பாடல்களின் இறுதியில் மறவாமல் உணவைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து மவ்லிது என்பது வயிற்றுப் பிழைப்புக்காகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ள குறுக்கு வழி என்பதை அறியலாம்.

**1وسماعه والحاضرين واهلهم *ومطعمهم حبا له كل لحظة**

கூஷி இதைக் கேட்டவர்களுக்கும் வந்திருப்பவர்களுக்கும் அவர் தம் குடும்பத்தினருக்கும் அவர் மேல் கொண்ட அன்பால் இவர்களுக்கு உணவளித்தவர்களுக்கும் ஒவ்வொரு நிமிடத்திலும் மன்னிப்புக் கிடைக்கட்டுமாக.

**2والسامعيه ومن للسمع قد حضروا *ومطعميهم على السم الغوث ذى العظم**

கூஷி இதைக் கேட்டோரையும் கேட்பதற்காக வருகை புரிந்தோரையும் மகத்துவமிக்க இரட்சிகராகிய இவர் பெயரால் வந்தோருக்கு உணவளித்தோரையும் அல்லாஹ் மன்னித்து விட்டான்.

மூன்றாவது பாடலில்

**3وعن حاضري ههنا والذى *يداريهم باسم غوث عظيم**

கூஷி இங்கே வந்தோரையும் மகத்தான இரட்சகராகிய இவர் பெயரால் வாரி வழங்கியோரையும் அல்லாஹ் மன்னித்து விட்டான்.

நான்காவது பாடலில்

**4والسامعين المطعمين *على البر الجواد**

**5والسمع المطعمينا *على اسمه بالغرام**

கூஷி வள்ளலாகிய இந்த நல்லவரின் பெயரால் உணவளித்துக் கேட்டவர்களையும் மறுக்கப்படாத உணவை (அதவாது தரமான சுவையான உணவை) அனைவருக்கும் குருவான இவர் பெயரால் தயாரித்தவர்களையும் அல்லாஹ் மன்னிப்பானாக.

8واغفرن للحاضرين هنا *والمضيف باطيب النعم

கூஷி இங்கே வருகை தந்தவர்களையும் சுவையான உணவை விருந்தளித்தவர்களையும் மன்னித்துவிடு.

6عفوا عن الذكار والسموع *لمدحه الحضار واتلصنوع

مطعوماناللذ ليس بالمنوع *على اسم شيخ الكل ذى ال

9وعفى عن سامعينا *مدحكم والصانعينا

طعمهم والحاضرينا *ههنا والذاكرينا

கூஷி உங்கள் புகழைச் செவியுற்றவர்களையும் இவர்களுக்கு உணவு தயாரித்தவர்களையும் இங்கே வருகை புரிந்தோரையும் (இவரை) திக்ரு செய்தவர்களையும் அல்லாஹ் மன்னிப்பாயாக.

கூஷி இதைக் கேட்டோர், வருகை தந்தோர், சங்கைக்குரிய இந்த இரட்சகருக்காக இவர்களுக்கு உணவளித்தோர் அனைவரையும் அல்லாஹ் மன்னிப்பானாக.

பதினோராவது பாடலில்

10والسامعين له من هو حاضر *مع مطعميهم للغياث الاكرم

11في حلقة الاذكار *والمطعم المدرار

கூஷி இந்த திக்ரு சபைக்கு வந்தோரையும் தொய்வின்றி தொடராக உணவளித்தோரையும் அல்லாஹ் மன்னிக்கட்டும்.

என்றெல்லாம் மறவாமல் தீனியைக் குறிப்பிடுகிறார். இதை எழுதியவருக்கு அப்துல் காதிர் ஜீலானி மேல் உள்ள அன்பு காரணமன்று.

இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் தகர்க்கக் கூடிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் உருவாக்கப்பட்ட மவ்லிதுகளைப் புறக்கணிக்கவும் ஒழித்துக் கட்டவும் அல்லாஹ் அருள் புரிவானாக.